# 28

# தமிழ்நூல் விவர அட்டவணை

*புலவர் மு. சண்முகம் பிள்ளை,*

*தமிழ் விரிவுரையாளர், திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி*

*சென்னைப் பல்கலைக் கழகம்.*

## பொருட் குறிப்பு

*நூற்றொகைகளின் இன்றியமையாமை — பாரத நாட்டு நூல் வழங்கு சட்டம் — தேசிய நூலகம் நூலடைவு செய்கிறது — இந்திய தேசிய நூல் விவரப் பட்டியல் — நூல் விவரப் பட்டியலின் தமிழ்ப் பகுதி — நூலுரிமைப் பதிவுச் சட்டம் — அரசிதழில் வெளிவரும் தமிழ் நூல் விவரம் — தமிழ்நூல் விவர அட்டவணை — மொழிவழி இராச்சியமும் வட்டாரமொழி வளர்ச்சியும் — ஆட்சிமொழி பயிற்று மொழிகளில் தமிழுக்குத் தனியிடம் — ஆட்சித் தமிழ் வளர்ச்சி — பயிற்று மொழியும் தமிழ் வளர்ச்சியும் — தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம் — பண்டுவந்த பலதுறை நூல்கள் — தமிழ்நூல் விவர அட்டவணை அலுவலகம் — தமிழ் நூல் விவர அட்டவணைக்கு அடிப்படை — அட்டவணைத் தொகுதிகள்: முதல் தொகுதி — இரண்டாம் தொகுதி — மூன்றும் தொகுதி — ஐந்தாண்டுத் தொகுதிகள் — தமிழ்நூல் விவர அட்டவணையில் பொருட்பாகுபாடு — நூல் விவரம் தரப்பட்டுள்ள முறை — நூல் விவரங்கள் — தொடர்எண் தரும் புதுமுறை — கூட்டு நூல்கள் — இலக்கிய நோக்கில் தமிழ் நூல்கள் — நூற்றொகை அகராதிகள் — பொருளகராதி — ஆசிரியர் அகரவரிசை — நூல் அகரவரிசை — தமிழ் நூல் விவர அட்டவணையில் வாராத நூல்கள் — 1867-க்கு முற்பட்ட அச்சுநூல் விவரங்கள் — மர்டாக் நூலட்டவணையின் மறுபதிப்பு — மர்டாக் நூலட்டவணைச் சேர்க்கைகள் — பழஞ்சுவடிகளின் விவரம் தரும் பிற அட்டவணைகள் — ஆவணக் காப்பக நூலட்டவணைகள் — கல்வித்துறை வெளியிட்ட நூற்றொகை — கன்னிமாராப் பொது நூலக நூற்றொகை — குழந்தைகள் நூற்றொகை — நூலக நூற்றொகை — சுவடி நூற்றொகை — இலக்கிய அகராதி — சிறப்பு நூலடைவு — நூலக நூல் விவர அட்டவணைகள் — வெளியீட்டாளர் நூற்றொகை — விளம்பர நூல் அட்டவணை — இக்கால நூல்கள் — நூல் விவர அட்டவணைகளும் இலக்கிய வளர்ச்சியும்.*

### நூற்றொகைகளின் இன்றியமையாமை

ஒரு நாட்டில் காலந்தோறும் வெளிவரும் இலக்கியம் முதலிய கலை நூல்களையும் அறிவியல் நூல்களையும் பிறவகை வெளியீடுகளையும் தெரிவிக்கும் கருவி நூல்கள் நூற்றொகை (Bibliography) எனப்படும் நூல் விவரத் தொகுப்புகளாம். நாட்டின் வரலாறு, மக்களின் பண்பாடு, நாகரிகம் முதலிய அனைத்தையும் வெளிப்படுத்தும் நூற்செல்வங்களின் இயல்புகளையும் சிறப்புகளையும் அறிவிக்கும் வழிகாட்டிகளாக இத் தொகுப்புகள் திகழ்கின்றன. ஆகவே, நூல் விவரத் தொகுப்புகள் மொழியின் வளர்ச்சிக்கும் அறிவு மேம்பாட்டுக்கும் மிகமிக இன்றியமையாதனவாம்.

வழக்கில் இல்லா முந்திய நூல்களைத் தேடிக் காண்பதற்கும் இந் நூற்றொகுப்புகள் ஊக்கம் தரும். நூல்களைத் தொகுதி தொகுதியாக வழங்கும் வழக்கு தமிழகத்தில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே உள்ளது. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறுகாப்பியம், பன்னிரு திருமுறை, நாலாயிரத் திவ்யப் பிரபந்தம், சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினன்கு, பண்டார சாத்திரங்கள் பதினன்கு, பிரபந்தம் தொண்ணூற்றாறு என்றாற்போல வழங்கிவரும் நூற்றொகை வழக்குகள் பண்டை இலக்கியச் செல்வங்களைக் காப்பாற்றிவைக்கும் நோக்குடன் அமைந்தனவே. சங்கநூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர் ராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளை, டாக்டர் உ. வே. சாமிநாதையர் போன்றோர்க்கு நூற்சுவடிகளைத் தேடித் தொகுப்பதற்கும் இத்தொகை வழக்குகள் துணைபுரிந்தன என்பது தெரியவருகிறது. இவ்வாறாகக் காலந்தோறும் வெளிவரும் நூல்களைப் பற்றிய நூல் விவரத்தொகுப்புகள், நூல்களைப் பின்னையோர் போற்றிப் பேணுதற்கும் உறுதுணையாவனவாம்.

### பாரத நாட்டு நூல் வழங்கு சட்டம்

நமது பாரத நாட்டில் நூல் விவரங்களை ஒருங்கே தொகுத்து நூலகவியல் முறைப்படி வெளியிடும் முயற்சி, நாடு விடுதலை பெற்றுப் பத்து ஆண்டுகளுக்குப் பின்பே மலரத் தொடங்கியது. அரசியலாரின் ஆதரவும் கண்காணிப்பும் இவ்வகைப் புத்தாக்கங்கள் நாளும் பொலிவுடன் வளர்வதற்குத் துணைநிற்கின்றன. பாரத நாட்டு அரசு பதினன்கு தேசிய மொழிகளிலும்[1] அச்சில் வெளிவரும் நூல்களையெல்லாம் ஒருங்கு தொகுக்கும் நோக்கத்தோடு நூலக வளர்ச்சியில் ஒரு புதிய திருப்பத்தைத் தோற்றுவித்தது. அதுதான் 1954ஆம் ஆண்டு இயற்றப் பட்ட 'அச்சு நூல்கள் — இதழ்களை வழங்கு சட்டம்' இச் சட்டம் 1956ஆம் ஆண்டு ஒருசில திருத்தங்களுடன் நடைமுறைக்கு வந்தது.[2]

### தேசிய நூலகம் நூலடைவு செய்கிறது

அச்சு நூல்கள் இதழ்கள் வழங்கு சட்டத்தின்படி கல்கத்தாவிலுள்ள இந்திய தேசிய நூலகத்திற்கும் மற்றும் சென்னை, பம்பாய், டெல்லி

நகரங்களிலுள்ள தலைமை நூலகங்களுக்கும் நூல் வெளியீட்டாளர் தத்தம் வெளியீடுகளை அனுப்பிவைத்தல் வேண்டும். நூல்களை அவைகள் வெளியான 30 நாள்களுக்குள் நூல் வெளியிட்டோர் தம் செலவிலேயே அனுப்ப வேண்டும் என்று இச் சட்டம் வரையறுத்துள்ளது. உரிய காலத்தில் தேசிய நூலகங்களுக்கு நூல்களை அனுப்பாவிட்டால் அபராதம் விதிக்கவும் இச் சட்டம் வகை செய்துள்ளது. இதனால் அச்சு நூல்களும் இதழ்களும் மேற்குறித்த நூலகங்களில் வந்து குவிந்து கொண்டிருக்கின்றன. இவற்றையெல்லாம் மொழிவழியாகப் பொருள் அடைவுப்படி தொகுத்தும் வகுத்தும் நூல் விவரங்களை வெளியிட்டு வருவது இந்திய தேசிய நூலகமே.

## இந்திய தேசிய நூல் விவரப் பட்டியல்

இந்திய தேசியப் பல்வேறு மொழியாளரும் பிறநாட்டவரும் பயன்படுத்தும் வகையில் தேசிய நூலகத்தார் தாம் வெளியிட்டுவரும் நூல் விவரப் பட்டியலை (The Indian National Bibliography) ரோமன் எழுத்தில் வெளியிட்டுவருகின்றனர். மூன்று மாதங்களுக்கு ஒருமுறை 1957ஆம் ஆண்டு இறுதியிலிருந்து இத் தொகுப்புகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. ஓராண்டு முடிந்ததும் ஆண்டுத் தொகுப்புகளும் வெளியிடப்படுகின்றன. 1958ஆம் ஆண்டு தொடங்கி இந்த ஆண்டுத் தொகுப்புகள் தொடர்ந்து வந்துகொண்டிருக்கின்றன.[3] இவற்றின் வாயிலாக ஒவ்வோர் ஆண்டும் நம் தமிழ் மொழியில் வெளிவரும் நூல்களைப் பற்றிய விவரங்களையும் நாம் தெரிந்துகொள்ளும் வாய்ப்பினைப் பெற்றுள்ளோம்.

## நூல் விவரப் பட்டியலின் தமிழ்ப் பகுதி

ரோமன் எழுத்தில் ஆண்டுத் தொகுப்புகள் வெளியிடுவதோடு ஒவ்வொரு மொழிவழி மாநில அரசுகளோடும் தேசிய நூலகம் தொடர்புகொண்டு, அந்தந்த மொழிகளிலும் ஆண்டுத் தொகுப்புகளை அந்தந்த அரசுகளின் சார்பில் வெளியிட்டு வருகின்றனர். இந்திய தேசிய நூல் விவரப் பட்டியலின் தமிழ்ப் பகுதியும் 1958ஆம் ஆண்டு முதல் வெளிவந்து கொண்டிருக்கின்றன.[4] ஆகவே, 1958ஆம் ஆண்டு முதல் ஒவ்வோர் ஆண்டும் அச்சில் வெளிவரும் தமிழ்நூல் விவரங்களை நாம் தமிழிலும் தெரிந்துகொள்ள இயலுகிறது.

## நூலுரிமைப் பதிவுச் சட்டம்

1958ஆம் ஆண்டுக்கு முற்பட்டு வெளியான தமிழ் நூல்களை அறிவதற்குரிய கருவி நூல்கள் வேண்டுமல்லவா? பொதுவாக ஆராய்ந்து பார்த்தால், நம் நாட்டில் அச்சு நூல்களின் விவரங்களைப் பதிவு செய்யத் தொடங்கியதே 1867-ல் தான். ஏனெனில், அந்த ஆண்டிலேயே நூல் உரிமையாளர் தத்தம் உரிமையைப் பதிவுசெய்யும் சட்டத்தை (Books Registration Act, 1867-XXV) இந்திய அரசாங்கம் இயற்றியது. இதன்படி நூல் வெளியீட்டாளர் தம் உரிமையைப் பதிவு செய்யத்

தொடங்கினர். பதிவு செய்யப்படும் நூல்களின் பிரதிகளும் நூற்பதி வாளருக்கு அனுப்பிவைக்கப்பட்டன. நூற்பதிவாளர் பதிவு செய்யப் பெற்ற பலமொழி நூல்களையும் அவற்றைப் பற்றிய முக்கியமான குறிப்புகளையும் அரசிதழின் (Gazette) வாயிலாக முத்திங்களுக்கு ஒரு முறை வெளியிட்டு வரலாயினர்.

## அரசிதழில் வெளிவரும் தமிழ் நூல் விவரம்

சென்னை மாநில அரசும் 1867ஆம் ஆண்டு மூன்றாவது காலாண்டுத் தொடக்கமாக அரசிதழின்வழிப் பதிவு நூல்களின் விவரக் குறிப்புகளை வெளியிட்டு வருகின்றது. அரசிதழின் வாயிலாக வெளிவரும் பதிவு செய்யப்பெற்ற தமிழ்நூல்களின் விவரங்கள் 1867ஆம் ஆண்டு முதற் கொண்டு தெரியவருகின்றன.

பதிவு செய்யப்பெற்ற நூல்களின் விவரங்களைக் கொண்ட முத் திங்கள் அரசிதழ் வெளியீடும் ரோமன் எழுத்திலேயே அமைந்தது. முதலில் ஒரே தொகுப்பாக — கலவையாய்ப் பலமொழி நூற் குறிப்பு களையும் வெளியிடத் தொடங்கி, நாளடைவில் பல்வேறு வளர்ச்சி நிலையை அது கண்டுள்ளது. மொழிவழிப் பாகுபாடும் பொருள்வழிப் பாகுபாடும் பெற்றுப் பின்னர் இன்றைய நூல் விவரத் தொகுப்பு களுக்கு ஒரு முன்னோடி நிலையில் இத் தொகுப்புகள் அமைவனவாயின.

1900-ஆண்டு தொடங்கி நூற்பெயர்களை ரோமன் எழுத்தில் தந்த தோடு அந்தந்த மொழிகளுக்குரிய எழுத்துகளிலும் அமைக்கலாயினர். இதனால் ரோமன் எழுத்தில் நூற்பெயர்கள் தவறாகப் படிக்கப்படும் நிலை தவிர்ந்தது. மேலும், இந்த வளர்ச்சி நிலையில் பின்வரும் விவ ரங்கள் அதில் தரப்பட்டிருத்தல் காணலாம். நூலின் தலைப்பு, நூல் அச்சிடப்பெற்ற மொழி, நூலாசிரியர், மொழிபெயர்ப்பாசிரியர், பதிப் பாசிரியர் விவரங்கள், நூற்பொருள், பதிப்பித்த அச்சகம், பதிப்பித் தோர், வெளியீட்டாளர், அச்சிட்டு வெளிவந்த தேதி, புத்தகத்தின் பக்கங்கள், அதன் வடிவம், அட்சிட்ட படிகளின் எண்ணிக்கை, உரிமை யாளர் பெயர், முகவரி, நூலைப் பற்றிய சிறு விளக்கம். இத்தனை செய்திகளும் நூல்களை ஆராய்வார்க்கு மிகவும் வேண்டுவனவே.

## தமிழ் நூல் விவர அட்டவணை

பலமொழி நூல்களோடு தமிழ் நூல் விவரங்களும் அரசிதழில் கலந்திருக்கின்ற காரணத்தால் தமிழ்பற்றிய செய்திகளைத் தனிப்பட அறிய வாய்ப்பில்லை; தவிரவும், அவை ஆங்கிலத்திலேயே அமைந்து யாவரும் எளிதில் அறியும் நிலையிலும் இல்லை. இக்குறைகளை நீக்கி நூலின் அரசிதழ்ப் பதிவு விவரங்களையும் அவற்றிற்குரிய நூற்படி களையும் ஒப்பு நோக்கி, நூல் விவரங்களை முறைப்பட வெளியிட்டுவர, நமது தமிழக அரசு வாய்ப்பு வசதிகளை நல்கியுள்ளது. அரசினரின் ஆதரவில் தொகுக்கப்பெற்று அச்சில் வெளிவந்துகொண்டிருப்பனவே

தமிழ் நூல் விவர அட்டவணைகள். இவற்றின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் இனி நோக்குவோம்.

### மொழிவழி இராச்சியமும் வட்டார மொழி வளர்ச்சியும்

நம் நாடு விடுதலை பெற்றபின், தேசிய மொழிகளை எல்லா வகையிலும் வளமுறச் செய்யவேண்டும் என்னும் நோக்கம் எங்கும் எழுச்சி பெற்றது. அதிலும் சிறப்பாக மொழிவழி இராச்சியங்கள் பிரிக்கப்பட்ட பின்னர், இவ்வுணர்வு மிகவும் கிளர்ந்து விளங்கியது. அரசியலாரும் தத்தம் இராச்சியத்தின் வட்டாரமொழிகளை வளர்ப்பதற்குப் பல்வேறு வகையான ஆக்கப்பணிகளைத் திட்டமிட்டுச் செய்துவரலாயினர். தனிப்பட்ட கழகங்களும், கல்வி நிலையங்களும், அறநிலையங்களும் தத்தமக்கு இயன்ற வகையில் மொழியாக்கப்பணிகளைச் செய்ய முன்வந்துள்ளன.

### ஆட்சிமொழி பயிற்றுமொழிகளில் தமிழுக்குத் தனியிடம்

மொழிவழி இராச்சியம் பகுக்கப்பட்ட 1956-ஆம் ஆண்டு நமது தமிழகமும் அன்று சென்னை இராச்சியம் என்னும் பெயரைப் பெற்றது.[5] நம் தமிழக மக்களின் வழக்கு மொழியான தமிழ் மொழியை ஆட்சிமொழியாகவும் கல்வித்துறையில் பயிற்றுமொழியாகவும் பயன்படுத்த அரசு முன்வந்தது. ஆட்சிமொழிச் சட்டம் தமிழக அரசால் 1956-ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்டது (Madras Official Language Act—1956). இச்சட்டத்தின் குறிக்கோள் அரசின் பல்துறை அலுவலகங்களும் படிப்படியாகத் தமிழிலேயே தங்கள் கடிதப் போக்குவரத்துகளையும் ஆணைகளையும் எழுதவேண்டும் என்பதாகும்.

### ஆட்சித் தமிழ் வளர்ச்சி

1959-ஆம் ஆண்டு ஜனவரி 14-ஆம் நாள் தைத்திங்கள் தொடக்கம் முதல் ஆட்சிமொழிச் சட்டம் நடைமுறைக்கு வந்தது. இன்றோ இம் முயற்சி படிப்படியாக வளர்ந்து தலைமைச் செயலகம் வரைக்கும் எட்டி விட்டது. முற்றும் தமிழையே ஆட்சி இயக்கங்களுக்குப் பயன்படுத்த வேண்டும் என்னும் நிலை இன்னும் வாராவிடினும் அத்திசை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிறது.

ஆட்சிமொழியாக்கத்தின் பொருட்டுத் தமிழக அரசு முன்பு செய்து வந்தனவும் இப்பொழுது செய்துவருவனவுமான பணிகள் பல இதன் பல்வேறு விளைவுகளுள் 'ஆட்சிச்சொல் அகராதி' ஒன்று வெளிவந்திருப்பது இங்குச் சிறப்பாகக் குறிப்பிடத்தகும். வேறுசிலரும் இத்துறைக்கான நூல்கள் சிலவற்றை ஆக்கித் தந்துள்ளனர். சிறப்பாக, திரு. கீ. இராமலிங்கனாரின் 'ஆட்சித்துறைத் தமிழ்'. (1968), திரு. கோ. முத்துப்பிள்ளையவர்களின் 'அரியணையில் அழகு தமிழ்' (1973) என்பவை குறிப்பிடத்தக்கனவாகும்.

## பயிற்றுமொழியும் தமிழ் வளர்ச்சியும்

கல்லூரிகளில் பயிற்றுமொழியாகவும் தமிழை நடைமுறைக்குக் கொண்டுவரும் முயற்சியும் அரசினர் ஆதரவில் புத்தாக்கம் பெற்றுள்ளது. இதன் விளைவாகக் கல்லூரிகளுக்கான நூல்களை ஆக்கும் சிறப்புப்பணியும் தோன்றத் தொடங்கியது. 1960-ஆம் ஆண்டில்தான் கல்லூரிகளில் தமிழ் பயிற்றுமொழியாக இடம்பெறத் தொடங்கியது. முதன் முதலாகக் கோயமுத்தூர் அரசினர் கலைக்கல்லூரியில் தொடங்கிய இம்முயற்சி படிப்படியாக வளர்ந்து, இப்பொழுது எல்லாக் கல்லூரிகளுக்கும் பரவியுள்ளது தொடக்கத்தில் முதுகலை வகுப்பில் தான் — பி. ஏ. பட்டப்படிப்பு வகுப்பில்தான் — கலைப்பாடங்களைத் தமிழில் பயிற்றுவித்தனர். 1963-ஆம் ஆண்டு புகுமுக வகுப்பிற்கும் (Pre - University Classes) தமிழ் பயிற்றுமொழியாய், உயர்தரப் பள்ளிக்கும் கல்லூரிக்கும் இடையிலிருந்து சிறு இடையறவும் நீங்கியது. 1969-ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்கத் தொடங்கியுள்ளனர். கல்லூரிப் பேராசிரியர்களும் பிறரும் கலை, அறிவியல் பாடநூல் பலவற்றை ஆக்கியுள்ளனர். பாடங்களைத் தமிழில் பயிற்றுவிப்பதற்கு மதுரைப் பல்கலைக் கழகம் ஆண்டுதோறும் பயிற்சி வகுப்புகளை நடத்திவருவது குறிப்பிடத் தக்கது.

தொடக்க காலத்தில் கல்லூரிப் பாடநூற் குழுவினரால் பட்டப் படிப்பிற்கேற்ற நூல்கள் வெளியிடப் பெற்றன. இவர்களின் முயற்சியால் வெளிவந்தவை 35 நூல்கள். பின்னர் 'தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்ற'த்தின் வழி கல்லூரிகளுக்கான நூல்கள் பல வெளிவந்தன. இப்பொழுதோ, தமிழ்நாட்டு அரசு நிறுவியுள்ள 'தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம்' பற்பல நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டு வருகிறது. 1973-ஆம் ஆண்டு ஜனவரியில் இந் நிறுவனம் வெளியிட்டுள்ள பாடநூற் பட்டியலைப் பார்ப்போமாயின், 450 நூல்கள் வெளிவந்திருப்பது தெரியவரும். மேலும், 50 நூல்கள் அச்சிலிருப்பதும் குறிப்பிடப் பட்டுள்ளன. இவ்வாண்டு ஐந்நூறு நூல்களுக்குமேல் கலை, அறிவியல் நூல்களை இந் நிறுவனம் தந்துவிடுதல் கூடும்[6]. இத்தகைய நூற் பெருக்கம் கல்லூரிகளில் தமிழ் பயிற்றுமொழியானதன் விளைவு என்பது கருதற்பாலது.

## தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம்

ஆட்சி மொழி வளர்ச்சியையும் கல்லூரிகளில் பயிற்றுமொழி ஆக்கத்தையும் செயல் முறைப்படுத்துவதற்காகத் 'தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம்' (Tamil Development and Research Council) என்னும் ஓர் அமைப்பைத் தலைமைச் செயலகத்தின் கல்வித்துறையில் ஓர் உறுப்பாக 1958-ஆம் ஆண்டு அரசினர் அமைத்தனர். இம்மன்றமே ஆட்சிமொழியாக்கம், கலைச்சொல் தொகுப்பு, கல்லூரிகளுக்கான பாடநூல் வெளியீடு ஆகியவற்றிற்கான வழிவகைகளை வகுத்து

முதற்கண் செயற்படுத்தத் தொடங்கியது. 1965-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்களில், இம் மன்றத்தையும் ஆட்சி மொழி அலுவலகத்தையும் தன்னுட்கொண்டு, 'தமிழ் வளர்ச்சித் துறை' (Tamil Development Department) தனியாகத் தோற்றுவிக்கப் பெற்றுள்ளது. தனி இயக்குநரின்கீழ்த் தமிழ் வளர்ச்சிப் பணிகள் இத்துறை வாயிலாக மேலும் மேலும் வளர்ந்தோங்கி வருகிறது.

### பண்டுவந்த பல துறை நூல்கள்

தமிழிலே புது நூல்களை ஆக்குவார்க்குத் துணைசெய்யும் வகையில் ஏற்கெனவே தமிழில் அச்சான கலைநூல், அறிவு நூல் முதலியவற்றின் விவரங்களைத் திரட்டும் பணியைத் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம் சிறப்புப் பணியாகக் கொண்டது. சென்னை மாநிலத்தில் முன்பு அச்சில் வெளியிடப்பெற்ற நூல்களுக்கு விவர அட்டவணைகளைத் தொகுப்பதற்கான முயற்சிகளில் அது ஈடுபட்டது.

### தமிழ் நூல் விவர அட்டவணை அலுவலகம் :

தமிழ் நூல் விவரங்களைத் தொகுத்து வெளியிடத் தனியாக ஓர் அலுவலகப் பிரிவும் ஏற்படுத்தப்பட்டது. இது 1960ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல்நாள் தொடக்கமாகப் பணிபுரியத் தொடங்கியது. 1867ஆம் ஆண்டுப் புத்தகப் பதிவுச் சட்டப்படி (Books Registration Act, 1867-XXV) பதிவு செய்யப்பெற்ற தமிழ் நூலின் விவரங்களை நூலக வியல் முறையைத் தழுவித்தொகுக்கும் பணியை இவ்வலுவலகப் பிரிவு மேற்கொண்டது. 1867ஆம் ஆண்டு முதல் 1958-ல் இந்திய தேசிய நூலகம் வெளியிடத் தொடங்கிய 'இந்திய தேசிய நூல் விவரப் பட்டியல்' வரையில் — 1957ஆம் ஆண்டு முடிய — பதிவு செய்யப்பெற்ற தமிழ் நூல்களுக்கு விவர அட்டவணை தயாரிப்பதே இதன் குறிக்கோளாகும்.

### தமிழ் நூல் விவர அட்டவணைக்கு அடிப்படை

பதிவு செய்யும்பொருட்டு நூற்பதிவாளருக்கு அனுப்பிவைத்த நூலின் பிரதிகள் தமிழக அரசின் ஆவணக் காப்பகத்தில்[7] சேமித்து வைக்கப்பட்டுள்ளன இவற்றுள் பல நூற்படிகள் பல்வேறு சூழ்நிலைகளால் எப்படியோ மறைந்தும் விட்டன. அங்கே கிடைத்த வரையில் அச்சுப்படிகளை ஆதாரமாகவைத்துத் தமிழ் நூல் விவர அட்டவணையைத் தொகுத்துள்ளனர். மறைந்த நூல்களுக்குரிய விவரங்கள், அரசிதழ்க் குறிப்புகளை ஆதாரமாகக்கொண்டு தொகுக்கப்படுகின்றன. பதிவு செய்யப்பட்ட நூல்களுக்கு ஒரு கால எல்லை அமைத்துக் கொண்டு, அந்தந்தக் காலப் பகுதியில் வெளிவந்த நூல் விவரங்களைத் தொகுதி தொகுதியாக வெளியிட்டு வருகின்றனர்.

## அட்டவணைத் தொகுதிகள்

### முதல் தொகுதி

ஒவ்வொரு தொகுதியும் ஆயிரத்திற்கு மேற்பட்ட பக்கங்களை அச்சில் கொண்டுள்ளன. எனவே, ஒவ்வொரு தொகுதியையும் பல பகுதிகளாகப் பகுத்து வெளியிட்டு வருகின்றனர். முதல் தொகுதியுள் 1867 முதல் 1900 வரை அச்சில் வெளிவந்த பதிவு நூல்களின் விவரங்கள் அடங்கியுள்ளன. இது ஐந்து பகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. இவற்றுள் முதல் மூன்று தொகுதிகள் இப்பொழுது ஆவணக் காப்பகத் திலிருந்து கிடைத்த நூல்களுக்கு உரியவை. இதில் தரப்பட்டுள்ள விவரங்கள் எல்லாம் நூலை முற்றும் பார்வையிட்டு எழுதப்பெற்றவை. இதனோடு அரசிதழ்க் குறிப்புகளும் ஒப்புநோக்கிக் கொள்ளப்பெற்றன. நான்காவது ஐந்தாவது பகுதிகள் இக்கால எல்லையில் பதிவு செய்யப் பெற்றும் நூற்படிகள் இல்லாமற் போனவற்றிற்கு உரியவை. இவற் றில் கொடுக்கப்பட்டுள்ள விவரங்கள் அரசிதழின் துணைகொண்டே தொகுக்கப்பட்டுள்ளன.

### இரண்டாம் தொகுதி

இரண்டாம் தொகுதி 1901 முதல் 1910 வரையில் பதிவு செய்யப் பெற்ற தமிழ் நூல்களுக்கு உரியவை. இதில் மூன்று பகுதிகள் உள. முதலிரு பகுதிகள் கிடைத்த நூற்படிகளுக்கும், மூன்றும் பகுதி இப்பொழுது ஆவணக் காப்பகத்தில் கிட்டாத நூல்களுக்கும் உரியவை. இப்பொழுது 1910ஆம் ஆண்டுவரையில் நூல் விவரங்கள் முற்றும் அச்சில் வெளிவந்துவிட்டன.

### மூன்றும் தொகுதி

1910ஆம் ஆண்டிற்குமேல் ஒவ்வோர் ஆண்டும் அச்சு நூல்கள் வரவரப் பெருகியே வருகின்றன. ஆதலால், 1911ஆம் ஆண்டு முதற் கொண்டு ஐந்தாண்டுக் கால எல்லைக்கு ஒரு தொகுதியாக வெளியிட முன்வந்துள்ளனர்.

1911 முதல் 1915 வரைக்கும் உரிய நூல்கள் மூன்றும் தொகுதியாக அச்சாகிவருகின்றன. இத் தொகுதியும் இரண்டாம் தொகுதி போலவே கிடைக்கப்பெறும் நூல்களுக்கு இருபகுதியும், கிடைக்கப் பெறுத நூல் களுக்கு ஒரு பகுதியுமாக மூன்று பகுதிகள் கொண்டுள்ளது. இத் தொகுதிக்குரிய அச்சுப் பணி நடைபெற்று இப்பொழுது நிறைவுறும் நிலையை எட்டியிருப்பதாகத் தெரியவருகிறது.

### ஐந்தாண்டுத் தொகுதிகள்

இங்ஙனமே மேல்வரும் ஐந்தாண்டுக்காலப் பகுதிகளை எல்லை யாகக் கொண்டு நூல் விவரங்கள் தொகுத்து அடைவு செய்து வரு

கின்றனர். 1916 முதல் 1925 வரை நான்கு ஐந்தாம் தொகுதிகள் அச்சகத்திற்கு அனுப்பிவைக்கப்பட்டுள்ளன. ஆறும் தொகுதிக்கான (1926-1930) விவரங்கள் தொகுக்கப்பட்டுத் தட்டச்சுப்படி செய்துள்ளனர். இப்பொழுது ஏழு, எட்டாம் தொகுதிகளுக்கான விவரங்களைத் (1931-1935; 1936-1940) தொகுத்துக் கொண்டிருக்கின்றனர்.

## தமிழ் நூல் விவர அட்டவணையில் பொருட்பாகுபாடு

தமிழ் நூல் விவர அட்டவணையில் இடம்பெறுபவை தமிழ் இலக்கிய—இலக்கண நூல்கள் மட்டுமல்ல. சமயவியல், கலையியல் முதலிய அனைத்துத் துறைகளிலும் வெளிவந்த நூல்கள் எல்லாம் இதில் இடம் பெறுகின்றன. இவையெல்லாம் நூலகவியல் முறைப்படி — டியூவி தசாம்ச முறைப் பாகுபாட்டு அடிப்படையில் அடைவு செய்யப்படுகின்றன. எனினும் கோலன் பகுப்பு முறையிலும் உரிய பொருட் குறிப்பு எண்களை ஒவ்வொரு நூலுக்கும் உரிய விவரம் முற்றுப் பெற்றதும் ஈற்றில் தந்துள்ளனர்.

## நூல் விவரம் தரப்பட்டுள்ள முறை

ஒவ்வொரு பொருட் பாகுபாட்டிலும் நூல் விவரங்கள் தரப்பட்டுள்ள முறையைச் சிறிது நோக்குவோம். டியூவி எண்ணுடன் பொருளும் ஒவ்வொரு பொருட் கூறுகளின் முதலிலும் இடம் பெறுகின்றன. அடுத்து, அந்தந்தப் பொருள் பற்றி வந்துள்ள நூல்களின் ஆசிரியர் பெயர் அடைவில் அவரவர் செய்த நூல் விவரங்கள் காணப்படுகின்றன. எனவே, ஒவ்வொரு நூலின் முன்னரும் அதனதன் ஆசிரியர் பெயர் அமையும். ஏதாகிலும் ஒரு நூலின் ஆசிரியர் பெயர் தெரியாவிட்டால் அந்த நூலின் பெயரையே ஆசிரியர் பெயர்போலக் கொண்டு அடைவு செய்யும் நூலகவியல் மரபினை இவ்வட்டவணையும் தழுவியுள்ளது.

## நூல் விவரங்கள்

ஒவ்வொரு நூலின் பெயரையும் அடுத்து, தனிப்பத்தியாகப் பின்வரும் விவரங்கள் தரப்பட்டுள்ளன. பதிப்பாசிரியர் பதிப்பக விவரம், நூல் வெளியிட்ட ஊர்ப்பெயர், நூல் வெளியிடப்பெற்ற ஆண்டு, நூலின் உள்ளடக்கத்தைக் குறிக்கும் பக்கங்கள், நூலின் வடிவ அளவு, நூலின் கட்டுமானத் தன்மை, விலை ஆகிய விவரங்கள் தரப்பட்டிருக்கும். மற்றும் நூலுள் படங்கள் இடம்பெறின் அவை பற்றிய குறிப்பும், நூல் வெளியீட்டு வரிசை எண் தெரியவந்தால் அதுவும் தரப்படும். இறுதியாக நூலின் பொருளைச் சுருங்க உரைக்கும் அறிமுகக் குறிப்பும் காணப்படும். இவையெல்லாம் ஒன்றன்பின் ஒன்ருக அடைவே தொடர்பாகத் தரும் நிலையினையே நூல் விவர அட்டவணைகளில் காண்கிரும். இவற்றிடையே உள்ள பாகுபாட்டை அரைப்புள்ளி முற்றுப்புள்ளி என்னும் குறியீடுகளே காட்டி நிற்கும். இவ்வகைப் பொது இயல்புகளைத் தமிழ்நூல் விவர அட்டவணையும் கொண்

டுள்ளது. ஆனால், எல்லா விவரங்களையும் பிரித்தறியும் வகையில் பதிப்பாசிரியர், ஆண்டு முதலிய எல்லாவற்றிற்கும் தனிக் குறிப்பு எண்கள் தந்திருப்பது இதன் சிறப்புப் பண்பாகும். இந்நூல் விவர அட்டவணை, i முதல் viii எண் குறிப்புகளில் இக்குறிப்புகளை நிரல்பட, விளக்கமாகத் தருகிறது.

### தொடர் எண் தரும் புது முறை

இந் நூலட்டவணையில் இடம்பெற்றுள்ள நூல்களுக்குத் தொடர் எண் தரப்பட்டிருப்பதும் இந்த அட்டவணையில் ஒரு புதுமையாகும். இதனால் ஒவ்வொரு தொகுதியிலும் அடங்கிய நூல்களின் எண்ணிக்கையை எளிதில் புரிந்துகொள்ளலாம். தவிரவும் அகராதிகளுக்குப் பயன்படுத்தவும் இத் தொடர் எண்கள் துணைசெய்கின்றன. பிற நூல் விவரப் பட்டியல்களில் அகரவரிசைப் பட்டியலில் குறிப்பு எண்ணுகப் பொருட்பகுதி எண்களையே சுட்டி வருகின்றனர். இவ்வகை எண் குறிப்பை நூலக விஞ்ஞானம் அறிந்தோரே எளிதில் புரிந்து கொள்ளுதல் கூடும். ஏனையோர் இவ்வகைக் குறிப்பைக் கொண்டு தாம் விரும்பிய நூல்களைக் காணுதல் அரிதாம். மேலும், ஒரு பொருட் கூறுபாட்டில் பல நூல்கள் இருந்தால், அந்தந்தப் பொருட்பகுதியில் அகரவரிசையின் துணைகொண்டே உரிய நூலைக் காணுதல் வேண்டும். தொடர் எண் முறையிலோ ஒவ்வொரு நூலுக்கும் தனி எண் கிடைத்து விடுகிறது. இவ்வாறாக நூல் விவர அட்டவணையில் சில சிறு மாறு பாடுகளைப் — புதுமைகளைப் — புகுத்தி இத் தமிழ் நூல் விவர அட்ட வணை நூல் விவரங்களை எளிதில் கண்டு பயன்படுத்த வழிவகை செய்துள்ளது.

### கூட்டு நூல்கள்

ஒரு நூலோடு வேறு சில நூல்களைச் சேர்த்தும் சிற்சில நூற் றொகுதிகள் வெளியிடப்படுகின்றன. இவை ஒரு பொருள் பற்றி யனவேயன்றி வெவ்வேறு பொருள் நிலையிலும் அமைவதுண்டு. ஆதலால், இவ்வகைக் கூட்டுநூல் தொகுப்புகளுள் உடன் இணைக்கப் பெற்ற நூல்கள் வேறுவேறு பொருட் பகுதிகளுக்கு உரியன வாகவும் இருக்கலாம் இவற்றை இத் தமிழ் நூல் விவர அட்டவணை ஏற்ற வகையில் அமைத்துள்ள திறமும் ஈண்டுச் சுட்டற்பாலது. ஒரு நூலோடு வேறு நூல்களும் உடனிருந்தால், முதல் நூலுக்குரிய பொருளிலேயே அந்நூல் அடைவு செய்யப்படுகிறது. இதற்குத்தான் தொடர் எண்ணும் உண்டு. இதனை அடுத்து இணைந்துள்ள நூல் களின் பெயர்கள் பகர வளைவுக்குள் தரப்படுகின்றன. பின், இணைந்த நூல்கள் அவ்வவற்றிற்குரிய பொருட்பகுதில் தனிப்பட தரப்பட் டுள்ளன. ஆனால், இத்தகு நூல்களுக்குத் தனித்தொடர் எண் தாராது எந்த ஒரு நூலுடன் சேர்ந்துள்ளதோ அதற்குரிய எண்ணைப் பார்க்க எனக் குறிப்புத் தரப்படுகிறது. இங்ஙனம் வரும் கூட்டுநூல்களின் எண்ணிக்கையும் பலவாம். இவற்றிற்கும் உரிய நூல் விவரங்கள்

தரப்படுவதோடு அகராதியிலும் இவை சேர்த்துத் தரப்படுகின்றன. இதனால் தொடர் எண்ணால் குறிக்கப்படும் நூற்றொகை கூட்டுநூல்களினால் மிகுவதும் பெறப்படும். இவ்வாறாக எந்த ஒரு தனிநூலும் இந்த நூல் விவர அட்டவணையில் விவரம் இன்றி அமையவில்லை.

## இலக்கிய நோக்கில் தமிழ் நூல்கள்

செய்யுள் இலக்கிய நூல்கள் டியூவி பொருட்பாகுபாட்டு முறையில் தமிழ்க் கவிதை என்னும் ஒரே பகுதியில்தான் இடம்பெறும். ஆனால், இத் தமிழ்நூல் விவர அட்டவணைகள் அவற்றை இலக்கிய நோக்கில் அமைத்துத் தருகின்றன. தமிழிலக்கிய வரலாற்று அடிப்படையில் இந் நூல் விவர அட்டவணையில் நூல்கள் இடம்பெறுகின்றன. பாட்டு-தொகை பற்றிய இலக்கியம், பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள், ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறுகாப்பியம், திருமுறை இலக்கியம், திவ்வியப் பிரபந்தம், பிற்காலக் காவியங்கள், சிற்றிலக்கியங்களாகிய பிரபந்த வரிசை, திரட்டுநூல்கள் என்று இவ்வாறு தனித்தனிப் பாகுபாட்டில் பாட்டிலக்கியம் பகுத்துத் தரப்பட்டுள்ளன. பிரபந்த வரிசையில் அகவல், அட்டகம், அந்தாதி என்று இவ்வாறு பிரபந்தங்களும் அகரவரிசையில் முறைப்படுத்தப்பட்டுள்ளன. இதனால் காலந்தோறும் வளர்ந்து வந்துள்ள பிரபந்த வகைகளை உணரலாகும். இசைத்தமிழ் நாடகத்தமிழ் நூல்களும் தனியிடம் பெறுகின்றன. 'கதைப்பாட்டு' என்னும் பகுதி நாட்டுப்புறச் செய்யுள் மரபில் வரும் அம்மானை பாட்டுப் போன்ற மக்கள் இலக்கிய வகையைக் கொண்டுள்ளது. கதைகளுக்கும் நவீனங்களுக்கும் ஒரு தனிப்பகுதி உண்டு. தமிழ் உரைநடை நூல்கள், கட்டுரைகள், வாழ்க்கை வரலாற்று நூல்கள் என்னும் பகுதிகள் உரைநடை இலக்கிய வளர்ச்சியை ஆராயப்புகுவார்க்குப் பெருந்துணை புரிவன. நிகண்டு, இலக்கணம், அகராதி ஆகியவை அடங்கிய பகுதியும் மொழி இயல்பினை அறிவதற்கான கருவிநூல்களைத் தரும். இங்ஙனமாகக் காலந்தொறும் தமிழிக்கிய வரலாற்றினை ஆராயப்புகுவார்க்கு இத்தமிழ் நூல் விவர அட்டவணைகள் ஓர் அரும் பொருட் களஞ்சியம்.

## நூற்றொகை அகராதிகள்

ஒருவர் தாம் விரும்பும் பொருளையோ, நூலையோ, நூலாசிரியரையோ நூற்றொகைகளில் கண்டுகொள்வதற்கு அகரவரிசையில் (Indices) மிகமிக அவசியமாகும். பெரும்பாலும் நூற்றொகைகளில் ஆசிரியர், தமிழாக்கியவர், பதிப்பித்தவர், உரையாசிரியர், நூல் சார் தொகுதி, நூலின் பொருள், தலைப்பு என்னும் குறிப்புகளை அகரவரிசைப்படுத்தித் தருவது மரபு. இவற்றிற்குரிய பொருட் குறிப்பு எண்களையும் உடன் தருவர். இந்த எண் குறிப்பினால் உரிய பொருட்பகுதியை நோக்கி நூல் இருக்குமிடம் தெரிதல் வெண்டும்.

இத்தகைய அகர வரிசைகளிலும் இத் தமிழ்நூல் விவர அட்டவணை, யாவரும் எளிதில் பயன்படுத்தத் தக்கதொரு புதிய அமைப்பினை

அறிமுகப்படுத்துகிறது. இந்த அட்டவணையில் ஒவ்வொரு தொகுதிக்கும் பொருளகராதி, ஆசிரியர் அகரவரிசை, நூல் அகர வரிசை முதலியன எல்லாம் தனித்தனியாக அமைத்துத் தந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

### பொருளகராதி

நூல் விவர அட்டவணையின் ஒவ்வொரு தொகுதியுள்ளும் அமைந்த பொருள்கள் இப் பகுதியில் இடம் பெறுகின்றன. இவற்றிற்கு உரிய டியூவி தசாம்ச எண், தொடர் எண், பக்க எண் என்னும் மூவகை எண் குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. எனவே, இத்தொகுதிகளைப் பயன்படுத்துவோர் விருப்பம்போல் மூன்றனுள் எதனையேனும் துணை கொண்டு உரிய பொருட்பகுதியை நூலுள் கண்டு கொள்ளலாம்.

### ஆசிரியர் அகரவரிசை

ஆசிரியர் அகர வரிசையில் ஆசிரியர் பெயர்களுக்குரிய பிற குறிப்புகள் இணைக்கப்பெறவில்லை. ஆனால், ஒரே பெயரில் ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர் வருமிடங்களில் மட்டும் வேறுபாடு உணர்த்த, தலைக்குறிப்பு எழுத்து முதலியவை உடன் தரப்பட்டுள்ளன. ஒவ்வோர் ஆசிரியர் பெயரையும் அடுத்து, அவ்வாசிரியர் செய்த நூல்களின் பெயர்கள் உரிய தொடர் எண் குறிப்புடன் தரப்பட்டுள்ளன. ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் ஓர் ஆசிரியர் பெயரின்கீழ் வரும்பொழுது நூற் பெயர்கள் அகராதி அடைவில் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வகராதியில் ஆசிரியர் பெயர் தடித்த எழுத்திலும் நூற்பெயர் சிறிது உள்ளடக்கிச் சாதாரண எழுத்திலும் தரப்பட்டிருக்கின்றன.

### நூல் அகர வரிசை

இதில் ஒவ்வொரு தொகுதியிலும் இடம்பெற்ற நூல்கள் அனைத்தும் தொடர் எண் குறிப்புடன் தரப்பட்டுள்ளன. அதோடு அந்தந்த நூலின் ஆசிரியர் பெயரும் நூற்பெயரை அடுத்துச் சிறிது உள்ளடக்கித் தரப் பட்டுள்ளன. ஆசிரியர் பெயர் தெரியவாராத நூல்கள் (பொருட் பகுதியில் ஆசிரியர் பெயர்போலக் கருதப்பெற்றவை) மட்டும் ஆசிரி யர் பெயரின்றி உரிய இடங்களில் காணப்படும். ஆகவே, நூல் அகர வரிசையில் நூலாசிரியரை உடன் அறியவும், ஆசிரியர் அகர வரிசை யில் ஓர் ஆசிரியரின் நூல்கள் அனைத்தையும் ஒருசேர அறியவும் இயலும். இத்தகைய வாய்ப்புகள் தமிழ்நூல் விவர அட்டவணையின் தனிச் சிறப்புகளாகும்[3].

### தமிழ் நூல் விவர அட்டவணையில் வாராத நூல்கள்

இங்ஙனமாக இத் தமிழ் நூல் விவர அட்டவணைகள் 1867ஆம் ஆண்டு தொடங்கிச் சென்னை மாநிலத்தில் அச்சிடப்பெற்றுப் பதிவு செய்யப்பெற்ற அனைத்து நூல்களையும் அறிவிக்கும் அருந்துணைவர் களாக விளங்குகின்றன. என்றாலும், இவ்வாண்டுகளில் அச்சிடப்பெற்

றுப் பதிவு செய்யப்பெறுமலும் சில பல நூல்கள் விடுபட்டிருக்கலாம். பிரஞ்சு ஆட்சிப் பகுதியாயிருந்த புதுச்சேரி முதலிய இடங்களிலும் பாரதநாட்டின் பிற பகுதிகளிலும் அச்சிடப்பெற்ற தமிழ் நூல்களும் இதில் இடம்பெற வழியில்லை. இலங்கை, யாழ்ப்பாணத்திலும் பர்மா, மலேயா முதலிய கீழை நாடுகளிலும் இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய மேலை நாடுகளிலும் அச்சான நூல்களும் இவ்வட்டவணைகளில் சேரா. எனவே, இன்னோன்ன வெளியிடங்களில் உள்ள தமிழ் நூல்களை அந்தந்த நாட்டுத் தலைமை நூலகங்களோடும் மற்றும் பிறநாட்டு அறிஞர் பெருமக்களோடும் தொடர்பு கொண்டு அறிதல் வேண்டும். ஏட்டுச் சுவடிகளைப் பாதுகாப்பதுபோல் இத்தகைய பழைய அச்சு நூல்களையும் தேடித் தொகுத்துப் போற்ற வேண்டுவது மிகமிக விரைந்து செய்ய வேண்டிய பணிகளுள் ஒன்ருகக் கருதத்தகும்.

### 1867-க்கு முற்பட்ட அச்சு நூல் விவரங்கள்

பதிவு செய்யப்பெருத அச்சுப் புத்தகங்களையும், பதிவு செய்யப் பெற்ற நூல்களுள் ஆவணக் காப்பகத்தில் இல்லாதவற்றையும் பொது நூலகங்களிலும் புலவர் பெருமக்களின் தனி நூலகங்களிலும் தேடிப் பெற்றுப் போற்ற வேண்டும். கிடைத்தற்குரிய சிறப்புடைய அச்சு நூல்களை மறு பதிப்பிடுதல் வேண்டும். இங்ஙனமே கி. பி. 1867-க்கு முற்பட்ட அச்சு நூற்படிகளையும் தேடிப்பெற்றுப் போற்ற வேண்டும்.

நூல்களைத் தேடித் தொகுக்கும் ஆர்வமுடைய அறிஞர் பெரு மக்கள் சிலர் சென்ற நூற்ருண்டில் வாழ்ந்திருந்தனர். அவர்களுள் சிறப்பாகக் குறிப்பிடத்தகுந்தவர் ஜான்மர்டாக் என்னும் பெரியார் (1819—1904). இவர் தாம் தொகுத்த தமிழ் நூல் அச்சுபடிகளுக்கு ஓர் அட்டவணையைச் செவ்விய முறையில் செய்து 1865-ஆம் ஆண்டு அச்சிட்டு வழங்கினர்[9]. இவரால் தோற்றுவிக்கப்பெற்ற சென்னைக் கிறித்தவ இலக்கிய சங்கத்தின்வழி இந் நூல் வெளியிடப்பட்டது.

ஜான்மர்டாக் தமது தமிழ் அச்சுநூல் விவர அட்டவணையைப் பொருட் பாகுபாடு செய்து நூல்களுக்குரிய விளக்கங்களுடன் நன்கு அமைத்துள்ளார். இந் நூலுக்கு அவர் எழுதியுள்ள 101 பக்கங்கள் கொண்ட முன்னுரை பெரிதும் பாராட்டத்தக்கதொன்று. தமிழ்மொழி இலக்கிய வரலாறுகளுடன் அச்சு நூல்களின் வரலாற்றையும் கொண்ட சிறந்ததொரு வரலாற்று முன்னுரையாகும். இவர் தொகுத்தளித்த தமிழ் நூல் விவர அட்டவணை நூல், 1865-க்கு முற்பட்ட தமிழ் நூல்களை அறிவிக்கும் அட்டவணைகளுக்குள் எல்லாம் தனியிடம் பெற்று விளங்குகிறது.

### மர்டாக் நூலட்டவணையின் மறுபதிப்பு

இத்தகைய தமிழ் நூல் வரலாற்றுத் தொகுதி நூருண்டுகளுக்கு மேலாக அச்சிடப்பெறுமல் பழைய படிகள் மிகமிக அருகிச் சில

இடங்களில் மட்டும் கிடைக்கும் ஒரு புதைபொருள்போல் இருந்தது. இந்த நூலின் மறுபதிப்பு வந்தாலன்றி 1867-ஆம் ஆண்டு தொடக்கமாகச் செய்துவரும் தமிழ் நூல் விவர அட்டவணை நிறைவுபெறாதன்றோ? எனவே, இதனை மறுபதிப்பிடும் பணியைத் தமிழக அரசின் அனுமதி பெற்று, யான் தமிழ் நூல் விவர அட்டவணைப் பதிப்பாசிரியனாயிருந்தபோது முற்றுவித்தேன். 103 ஆண்டுகளுக்குப்பின் 1868-ஆம் ஆண்டு மர்டாக் நூலட்டவணையின் மறுபதிப்பினைத் தமிழக அரசு அறிஞர் உலகுக்கு அளித்துள்ளது. இந்த மறுபதிப்பு முற்பதிப்பிலிருந்து சிறிதும் மாறுதலின்றி அப்படியே பதிப்பிக்கப்பட்டிருக்கிறது.

### மர்டாக் நூலட்டவணைச் சேர்க்கைகள்

கிரௌன் வடிவில் 387 பக்கங்கள் (ci+287) கொண்ட இம் முதற் பதிப்பு இம் மறுபதிப்பில் டெமி வடிவில் 662 பக்கங்களாக வளர்ந்துள்ளது. இந்தப் பழஞ்சுவடியுடன் மேலும் சென்ற நூற்றாண்டு அச்சு நூல் முதலியவற்றின் விவரம் தரும் வேறு நூல் செய்திகளையும் பிற்சேர்க்கைகளாக இணைத்ததன் விளைவே இந்தப் பெருக்கம்.

முதல் பிற்சேர்க்கை மர்டாக் நூலுள் தரப்பட்டுள்ள சில நூல்களைப்பற்றிப் பிரிட்டிஷ் மியூஷியம் காட்லாக்கில் காணும் அதிகப்படியான விவரங்களைக் கொண்டுள்ளது எந்தெந்த நூல்களுக்கு இவ்வகைப் புது விவரங்கள் தரப்பட்டுள்ளன என்பது நூலகத்தே நூற்பெயர்களின் இறுதியில் இரண்டு உடுக்குறியிட்டுக் (Double Star marks) காட்டப்பட்டன.

அடுத்துவரும் இரண்டாம் பிற்சேர்க்கை பல்வேறு தமிழ் நூலட்டவணைக்குரிய முகவுரைகளின் தொகுப்புகளாகும். இவை தமிழ் நூற்றொகைபற்றி (Bibliography) நடைபெற்ற பற்பல முயற்சிகளையும் அவற்றின் தன்மைகளையும் அறிய வகை செய்கின்றன. மூன்றாவது பிற்சேர்க்கை தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறையில் நடைபெற்றுவரும் தமிழ் நூல் விவர அட்டவணை (Madras State Bibliography) பற்றிய மதிப்புரையாகும்.

'தமிழ் இலக்கிய அகராதி' என அடுத்துவரும் நான்காவது பிற்சேர்க்கை, 1896-ஆம் ஆண்டு திருமணம் செல்வக் கேசவராய முதலியாரால் தொகுத்தளிக்கப் பெற்றதாகும். இதனால் தமிழ் நூல்களுள் இன்றியமையாது அறியவேண்டுவனவாகிய நூல்கள் எவையெவை என்பது தெரியவரும்.

நூற்பெயர் அகராதியில் புதிய சேர்க்கைப் பகுதி நூல்களும் இணைத்துத் தரப்பட்டுள்ளன. 'ஆசிரியர் அகரவரிசை' இப் பதிப்பில் புதிதாகத் தொகுத்து இணைக்கப்பெற்றது. நூலிறுதியில் பொருளகராதியும் இடம் பெற்றுள்ளது.

இந் நூலின் இறுதியில் உள்ள நூற்றொகை பிரிட்டிஷ் மியூஷியம் நூலட்டவணையின் துணைகொண்டு அமைக்கப்பெற்றது. இதன் வாயிலாகச் சென்னை மாநிலத்திற்கு வெளியிடங்களில் முக்கியமாக இலங்கை, பர்மா, மலேயா, சிங்கப்பூர் முதலிய இடங்களிலும் புதுச்சேரி, பங்களூர், பம்பாய் முதலிய இந்தியாவின் பிற இடங்களிலும் பதிப்பிக்கப்பெற்ற நூல் விவரங்களும் தெரியவருகின்றன. பத்தொன்பதாம் நூற்றுண்டு முடிய, 1900 வரை வெளியான அச்சுநூல் விவரங்கள் இத் தொகுப்பில் தரப்பட்டுள்ளன. இங்ஙனமாக, மர்டாக் நூலட்டவணையின் புதிய பதிப்பின் சேர்க்கைகளால் தெரியவரும் தமிழ் நூல்பற்றிய செய்திகளும் பலவாகும்.

## பழஞ்சுவடிகளின் விவரம் தரும் பிற அட்டவணைகள்

பதினெட்டாம் நூற்றுண்டில் மெக்கன்ஸி என்பார் இந்தியாவில் பல இடங்களிலிருந்தும் சுவடிகள், கல்வெட்டுப் படிகள், வரலாற்றேடுகள் முதலியவற்றைத் தக்கவர்களைக்கொண்டு தொகுப்பித்தார். இவருடைய தொகுப்புகள் மொழி வரலாற்றுக்கும் நாட்டு வரலாற்றுக்கும் பயன்படத்தக்க பல செய்திகளைக் கொண்டிருந்தன. இவற்றின் விவரங்களை எச். எச். வில்ஸன் என்பார் 1828-ல் நூல்வடிவில் தொகுத்துத் தந்துள்ளார்[10]. மேலும், தமிழ் வரலாற்றுச் சுவடிகளின் தொகுப்பை 1835-ல் இரு தொகுதிகளாக அச்சிட்டு வழங்கியுள்ளார்[11]. இப் பெருந்தொகுதிகள் தெள்ளிய வரலாற்றுச் செய்திகள் பலவற்றை அறிவிக்கும் அரிய கருவூலங்களாகவுள்ளன. மற்றும், கிழக்கிந்தியா ஹவுஸிலும் அக்கால அச்சு நூற்படிகள் முதலியன தொகுத்துவைக்கப்பட்டிருந்தன. மேனுட்டவராகிய பிரவுன் என்பாரும் தமக்குக் கிட்டிய நூற்படிகளைத் தொகுத்து வைத்திருந்தார். இவற்றையெல்லாம் ஒருங்கு தொகுத்துச் சுவடி விவரங்களை வில்லியம் டெய்லர் பாதிரியார் மூன்று தொகுதிகளாக வெளியிட்டுள்ளார். இவை முறையே 1857, 1860, 1862-ஆம் ஆண்டுகளில் வெளிவந்துள்ளன[12]. இவற்றுள் முதல் தொகுதியிலும் மூன்ரும் தொகுதியிலுமே தமிழ்நூல் விவரங்கள் உள்ளன.

## ஆவணக்காப்பக அட்டவணைகள்

சென்னை மாநிலத்தில் பதிவுசெய்யப் பெற்ற அனைத்து மொழி நூல்களின் விவரங்களையும் 1867-ஆம் ஆண்டு முதல் 1889-ஆம் ஆண்டு வரை ஒரு தொகுப்பாக நூற்பதிவாளர் வெளியிட்டுள்ளார். இதனைத் தொடர்ந்து சென்னை ஆவணக்களரி நிலையம் (Madras Record office) மேலும் பல தொகுதிகளை வெளியிட்டு வருகின்றது. இதுவரை நான்கு தொகுதிகள் (1890—1920) வெளிவந்துள்ளன[13]. இவற்றின் வாயிலாகவும் பதிவு செய்யப்பெற்ற தமிழ் நூல்கள் எவை என்பது தெரியவரும். ஆனால், இத் தொகுதிகளில், நூல், நூலாசிரியர், பதிப்பகம், பதிப்பித்த ஆண்டு தவிர வேறு செய்திகள் ஒன்றும் தெரிவதற்கில்லை. இங்ஙனமாக இந் நிலையம் மேலும் ஐந்தாண்டுகளுக்கு ஒரு தொகுதி

யாகப் பதிவுசெய்யப்பட்ட நூல் விவரங்களைத் தொகுத்து அச்சிடும் பணியை மேற்கொண்டுள்ளது.

### கல்வித்துறை வெளியிட்ட நூற்றொகை

1948இல் நிறைவேறிய சென்னைப் பொதுநூலகச் சட்ட விதிமுறைகளின் சார்பில் தமிழகக் கல்வித்துறையினர் ஒருசில நூற்றொகைகள் கொண்டுவந்துள்ளனர். 'தமிழ்நாட்டு நூற்றொகை'[14] என்னும் பெயரில் 1951ஆம் ஆண்டில் வெளியான தமிழ் நூல்களின் விவரம் வெளிவந்துள்ளது. பின், 1954ஆம் ஆண்டுத் தமிழ் நூல்களுக்குச் சில பகுதிகள் வெளிவந்தன. இவை ஆவணக் காப்பக வெளியீடுகளைப் போலவே விவரங்களைத் தமிழில் தருகின்றன. ஆனால், கோலன் பகுப்பு நூலகவியல் முறைப்படி இது பாகுபாடு செய்யப்பட்டுள்ளது குறிப்பிடத்தகும். தொடர்ச்சியின்றி இம் முயற்சி இடையறவுபட்டுள்ளது.

### கன்னிமாராப் பொதுநூலக நூற்றொகை

ஆனால், கன்னிமாராப் பொது நூலகம் 1964ஆம் ஆண்டு முதல் மாதத் தொகுப்பும் ஆண்டுத் தொகுப்புமாகத் தமிழ் நூற்றொகையை மையொற்றுப்படி செய்து தமிழக நூலகங்களுக்கு வழங்கி வருகின்றனர். ஆனால், இவை அச்சுப்படிகளாக யாவரும் பெற்றுக்கொள்ளும் வகையில் வெளியிடப்படவில்லை என்றாலும், நூலகங்களில் இத் தொகுப்பு ஆய்வாளர்க்குக் கிடைக்கும்.

### குழந்தைகள் நூற்றொகை

பொது நூற்றொகைகள் ஒருபாலாகச் சிறப்பு வகையில் அமைந்த சில தனி நூற்றொகைகளும் அவ்வப்போது வெளிவந்துள்ளன. அவற்றுள், ஒன்று தமிழக நூலகத்துறை முன்னின்று இயக்கிய 'குழந்தைகள் நூற்றொகை.' கன்னிமாராப் பொதுநூலகத்திற்கு நூல் வழங்கு சட்டப்படிவரும் தமிழ் நூல்களுள் குழந்தைகளுக்கான நூல்களைத் தனியாகப் பிரித்து, 1963ஆம் ஆண்டு முதல் ஒவ்வோர் ஆண்டிற்கும் தனித் தொகுதிகளும் வெளியிட்டு வருகின்றனர். இது கல்வித் துறைக்குப் பெரிதும் துணை செய்வதாகும்[15]. ஆனால், இதுவும் தொடர்ச்சியாக ஆண்டுதோறும் வெளிவருவதில்லை.

### நூலக நூற்றொகை

நூலக நூற்றொகைகளுள் முதன்மையாகச் சுட்டத்தக்கவை இலண்டன்மா நகரிலுள்ள ஆங்கில நாட்டுப் பொருட்காட்சிக் கூடத்தில் உள்ள தமிழ் நூல்களுக்கு அச்சில் வெளிவந்துள்ள நூற்றொகை. இது ஜி. யூ. போப் பாதிரியாரால் தொடங்கப்பெற்று, பின்னர் அப் பொருட்காட்சிக் கூடத்திலே கீழ்த்திசைப் பதிப்பு நூல்களுக்கும், எழுத்துச் சுவடிகளுக்கும் காப்பாளராகப் பணிபுரிந்த எல்.டி. பார்னட் என்பவ

ரால் முற்றுவிக்கப்பெற்றது. 1909ஆம் ஆண்டு வெளிவந்த இந் நூலட்டவணையில்[16] இரு நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட அச்சு நூல் விவரம் முதல் அதுவரை அந் நூலகத்தில் தொகுக்கப்பெற்ற நூல் களுக்குரிய விவரங்களைத் தெரிவிக்கிறது. பின்னர், 1931ஆம் ஆண்டு பார்னட் இதற்கு ஓர் இணைப்புத் தொகுதியும்[17] வெளியிட்டுள்ளார்.

### சுவடி நூற்றொகை

சென்ற நூற்றாண்டிலேயே பழஞ்சுவடிகளைத் திரட்டிப் பாதுகாப்ப தற்கு நமது மாநில அரசு கிழக்கியல் சுவடி நிலையம் (Oriental Manuscript Library) ஒன்றையும் நிறுவியுள்ளது. மக்கன்ஸியின் சுவடித் தொகுப்புகளைக்கொண்டு தொடங்கப்பெற்ற இந்நூலகத்தில் அச்சில் வெளி வந்தனவும் வாராதனவுமான பல சுவடிகள் சேமித்துவைக்கப் பட்டுள்ளன. இந் நிலையம் இங்குள்ள தமிழ்ச் சுவடிகளுக்கு அவ்வப் போது பல விவரத் தொகுப்புகளை வெளியிட்டு வந்துள்ளது[18].

அடுத்தபடியாக, தஞ்சைச் சரசுவதி மகால் நூல்நிலையம் வெளி யிட்டுள்ள தமிழ்ச்சுவடி நூற்றொகைகள் கருதத்தக்கவை. இவற்றைத் தொகுத்து அளித்தவர் முன்பு திருவையாற்று அரசர் கல்லூரித் தமிழ்ப் பண்டிதராக விளங்கிய எல். உலகநாத பிள்ளையவர்களாவர். இவர் களால் தொகுத்து வெளியிடப்பட்ட சுவடி நூற்றொகைகள் மூன்று தொகுதிகளாக 1925—1926ஆம் ஆண்டுகளில் அச்சில் வெளிவந் துள்ளன. இவற்றில் சுவடி நூல்களுக்கு விரிவான விளக்கங்கள் தரப் பட்டிருத்தல் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

இவ்வகையில் மூன்றாவது குறிக்கத்தக்கது மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையச் சுவடிகளின் விளக்கம். தனி நிறுவனமாகத் திருவான்மியூரில் இப்பொழுது திகழும் இந்நூலகம் தங்கள் நிலையத்திலுள்ள சுவடி விளக்கங்களை இரு தொகுதிகளாக முறையே 1956, 1961ஆம் ஆண்டுகளில் வெளியிட்டுள்ளது. இவை முன்னர் வெளிவந்துள்ள சுவடி விளக்க நூல்களின் அமைப்பிலேயே தரப்பட்டுள்ளன. இவற்றால், அச்சில் வெளிவந்த, வாராத நூல்கள் பலவற்றில் விவரங்கள் தெரியவரும்.

மதுரைத் தமிழ்ச் சங்கம், கரந்தைத் தமிழ்ச்சங்கம் போன்ற அமைப்புகளிலும், திருவாவடுதுறை, தருமபுரம், துறையூர், மேல சித்தாமூர் முதலிய இடங்களிலுள்ள மடங்களிலும் பழஞ்சுவடிகள் பல உள. எனினும், இங்கெல்லாம் அவற்றை வகைதொகை செய்து, ஆய்வாளர்க்குப் பயன்படும் வகையில் நூற்றொகுதிகளாக வெளியிடும் முயற்சி நடைபெறவில்லை.

### இலக்கிய அகராதி

தமிழ் நூற்றொகைகள், சுவடி நூற்றொகைகள், மற்றும் இலக்கிய வரலாற்று நூல்கள் முதலியவற்றைத் துணைகொண்டு ஆசிரியர்

ந. சி. கந்தையாப்பிள்ளை 'தமிழ்ப்புலவர் அகராதி', 'தமிழ் இலக்கிய அகராதி' என இரு தொகுப்புகளை முறையே 1952, 1953ஆம் ஆண்டுகளில் வெளியுட்டுள்ளார்.[19] இவர் தமது முன்னுரையில் தமக்கு எந்தெந்த நூற்றொகைகள் உதவியாயிருந்தன என்பதையும் எடுத்துக் காட்டியுள்ளார். இவர் அமைத்த பாங்கிலேயே 'தமிழ் இலக்கிய அகராதி' ஒன்று 1895இல் திருமணம் செல்வக் கேசவராய முதலியாரால், 'தமிழும் தமிழரும்' எனத் தாம் வெளியிட்ட நூலின் பிற்சேர்க்கையாகத் தரப்பட்டுள்ளது. இது, 'நூலும் நூலாசிரியரும்', 'நூலாசிரியரும் நூலும்' என இரு கூறாக அமைந்துள்ளது. இதனைப் பின்னாளில், 'தமிழ் இலக்கிய அகராதி' வெளியிட்ட ந. சி. கந்தையாப் பிள்ளை தமது நூலுள் குறிப்பிடவில்லை. எனவே, அவர் தம் பார்வைக்கு இந் நூல் எட்டவில்லை என்று ஊகிக்கவேண்டியிருக்கிறது. தமிழ் நூற்றொகைகளைத் துருவி முறைப்படப் பார்வையிட வேண்டியதன் இன்றியமையாமையையும் இது விளக்குகிறது.

தமிழ்ப்புலவர் வரலாறுகளை விரிவான முறையில் கருப்பக்கிளர் சு. அ. இராமசாமிப் புலவர் அவர்களைக்கொண்டு எழுதுவித்துப் பல தொகுதிகளாக திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் தொடர்ந்து வெளியிட்டு வருகின்றனர். விரிவான வரலாறு தெரியவரும் புலவர் வரலாறுகள் கொண்ட தொகுதிகளைத் 'தமிழ்ப் புலவர் வரிசை'[20] என்றும், சுருக்கமான வரலாறுகள் மட்டுமே கிடைக்கும் புலவர் வரலாறுகளை அகராதியடைவில் தொகுத்துத் 'தமிழ்ப்புலவர் அகரவரிசை' என்றும் அமைத்துள்ளனர். சமயாசாரியர்கள், ஆழ்வார்கள், சங்க நூற்புலவர்கள் முதலியோரின் வரலாறுகள் தனிநூல்களாக வந்திருப்பதனால் அவர்களுடைய வரலாறுகளை விடுத்து ஏனைய புலவர் வரலாறுகளே இத்தொகுதிகளில் தரப்பட்டுள்ளன. 1959இல் தொடங்கிய இவ்வரிசையின் முப்பதாம் புத்தகம் சென்ற ஆண்டில் (1972) வெளிவந்திருக்கிறது. 2634 புலவர் வரலாறுகளை இவை கொண்டுள்ளன.

இவர்களுடைய வெளியீட்டில் தமிழ்ப்புலவர் அகரவரிசையின் இரண்டாம் தொகுதியில் மூன்றும் பகுதி 'தமிழ் நூல்களின் அகரவரிசை'யாகும். இதுபுலவர் வரிசைப் புத்தகங்களில் அவ்வப் புலவர்களின் படைப்புகளாகக் குறிக்கப்பட்ட நூல்களின் அகரவரிசைப் பட்டியலாகும். இங்ஙனமாகத் தமிழ் நூல்களையும் புலவர் பெருமக்களையும் அறிமுகபடுத்தும் வகையில் இப் புலவர் வரிசைத் தொகுதிகள் மேன்மேலும் வளர்ந்து வந்திருப்பது நாடு விடுதலை பெற்றபின் நிகழ்ந்துவரும் தமிழ் இலக்கிய வளர்ச்சிப் பணிகளுள் தனியாகக் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

### சிறப்பு நூலடைவு

குறித்ததொரு நூலின் வரலாற்றை ஆராயப் புகுவார்க்கு அந்தந்த நூல் பற்றித் தொகுப்பட்ட சிறப்பு நூலமைவுகளும் வேண்டும்.

பதிப்பாசிரியர்களுள் ஒருசிலர் முந்திய பதிப்புகளைக் குறித்து இவ்வாறான சிறப்பு நூலடைவைத் தம் பதிப்புகளுள் இணைத்தும் உள்ளனர். எடுத்துக்காட்டாகச் சைவசித்தாந்த சமாஜத்தினர் வெளியிட்ட 'சங்க இலக்கியம்' தொகுதியில் சங்கநூல் பதிப்பு விவரங்கள் அடைவே திரட்டித் தரப்பெற்றுள்ளமையைக் கூறலாம்[21].

திருவள்ளுவர் திருக்குறளுக்குச் சில தனி நூலடைவுகள் வந்துள்ளன. சில ஆண்டுகளுக்கு முன் (1968) சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் தாம்வெளியிட்ட 'திருவள்ளுவர் திருநாள்விழா மல'ரில் திருக்குறள் நூலடைவை ஒரு பகுதியாக அமைத்துத் தந்துள்ளனர். இதன் பின்னர், ஆங்கிலத்தில் திருக்குறள் நூலடைவு ஒன்றைத் திருமலை முத்துசாமி அவர்கள் வெளியிட்டுள்ளார்[22]. சென்ற ஆண்டு (1972) சென்னைப் பல்கலைக் கழகத்தில் நிகழ்ந்த முதலாவது அனைத்திந்தியத் திருக்குறள் கருத்தரங்கில், அப்பொழுது திருக்குறள் துறையில் பணிபுரிந்துவந்த திரு. க. த. திருநாவுக்கரசு அவர்கள், 'திருக்குறள் நூலடைவு' ஒன்றை மையொற்றுப்படியாக அமைத்துத் தந்துள்ளார்கள். மேலும், திரு. க. த. திருநாவுக்கரசு அவர்களால் தொகுக்கப்பெற்ற 'தொல்காப்பிய நூலடைவு' சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை வெளியிட்டு வரும் 'தமிழாய்வு' முதலிதழில் இடம் பெற்றுள்ளது[23].

கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை இவ்வாண்டில் (1973) தேனிலே ஊறிய செந்தமிழின் சுவை தேரும் சிலப்பதிகாரத்திற்கு 'சிலப்பதிகார ஆய்வடங்கல்' என்னும் பெயரில் ஒரு நூற்றொகையை வெளியிட்டுள்ளது[24]. தனி நூலடைவுகளுள் இதுவும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இதில் சிலப்பதிகார நூற்பதிப்புகள், சிலம்பு பற்றிய ஆய்வுநூல், கட்டுரை எழுதிய ஆசிரியர் அகரவரிசை, தலைப்புகளின் அகரவரிசை ஆகியவை தரப்பட்டுள்ளன. தலைப்புகளின் அகரவரிசையின் முதற்பகுதியில் தமிழ் நூல்களும், அடுத்த பகுதியில் தமிழில் வெளிவந்த கட்டுரைகளும், இறுதிப் பகுதியில் ஆங்கிலத்தில் வெளிவந்த கட்டுரைகளும் தொகுக்கப்பட்டுள்ளன. இவ்வகையான சிறப்பு நூலடைவுகளும் ஆய்வாளர்க்கு மிகமிக இன்றியமையாதன.

மகான் வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி சுவாமிகளால் பாடப்பெற்ற ஊர், நூல் விவரங்களைத் திருவாமாத்தூர்க் கௌமார சபையார் வெளியிட்டுள்ளனர்[25]. 'ஊர்ப்பெயரும் நூற்றொகையும்' என்னும் இந் நூலடைவில் சுவாமிகள் அருளிய அனைத்துநூல் விவரங்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. இதனால் இதுவரை அச்சில் வெளிவந்த, வாராத நூல்கள் எவையெவை, பதிப்பிக்க எடுத்துக் கொண்டிருப்பவை எவையெவை, என்னும் விவரங்கள் தெரியவருகின்றன. இஃது ஓர் ஆசிரியரின் நூல்களுக்கான தனி நூற்றொகை. இங்ஙனமே, ஆறுமுக நாவலரின் நூல்களைக் குறித்தும் ஒரு தனி வெளியீடு வந்துள்ளது.[26]

திரு. திருமலை முத்துசாமி அவர்கள் பத்திரிகை வாயிலாக வெளியிட்ட டாக்டர் மு. வரதராசனர், வாகீச கலாநிதி கி. வா. ஜகந்நாதன் ஆகியோரின் நூல்களுக்கான நூற்றொகைகள் இவ்வகையின. இது போன்றே பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை, கப்பலோட்டிய வ. உ. சிதம்பரம் பிள்ளை முதலியோரின் நூல்களுக்கும் தனி நூற்றொகைகள் இதழ்களில் வெளியிடப்பட்டுள்ளன.

இப்பொழுது நம் பல்கலைக் கழகத்தில் வெளியிடப்பட்டுள்ள பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களின் 'சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகளி'ல் சங்க இலக்கிய நூற்றொகை உள்ளது[27]. இதில் சங்க இலக்கியப் பதிப்பு விவரங்களோடு சங்க இலக்கியங்களின் அடிப்படையில் எழுந்த ஆராய்ச்சி நூல்கள் முதலியவற்றின் அடைவும் இடம் பெற்றுள்ளன.

சமய நூல்களுக்கும் இவ்வகை நூற்றொகைகள் சில வெளிவந்துள. திருச்சிற்றம்பலம் திரு. மு. அருணசலம் அவர்கள் 1966-ல் வெளியிட்டுள்ள 'சைவசித்தாந்தச் சிறு நூல்கள்' என்னும் தொகுப்பு சைவ சித்தாந்த சாத்திர நூல்களை அறிமுகப்படுத்துகிறது[28].

இந்தியக் கிறிஸ்தவரின் சமய நூலட்டவணை ஒன்று 1969-ல் வெளிவந்துள்ளது[29]. இந்திய மொழிகளில் பற்பல காலங்களிலும் வெளியான கிறிஸ்தவ சமய நூல்களின் விவரங்களை இந்நூல் தருகிறது. கி. பி. 1600-க்கு முன்வந்த நூல்கள் தொடங்கி 1965ஆம் ஆண்டு வெளிவந்த நூல்கள் வரையில் காலப்பாகுபாடு செய்து இதில் அடைவுபடுத்தித் தந்துள்ளனர். இதுபோன்று சமயச் சார்பான நூல்களுக்கும் தனிநூல் விவர அட்டவணைகள் வெளிவருவது, அந்தந்தச் சமய உண்மைகளை ஆராய முற்படுவோருக்கு மிகுதியும் பயன்படும்.

மறைத்திரு சேவியர் எஸ். தனிநாயகம் அடிகளார் மேலைநாட்டு மொழிகளில் வெளியிடப்பெற்ற தமிழ் நூல்களுக்கு ஒரு நூலடைவை யாத்தளித்துள்ளார்[30]. இதன்வழி மேலைநாட்டு மொழிகளில் மொழிபெயர்ப்பாகவும், ஆய்வாகவும், இன்னபிறவாகவும் வந்துள்ள நூல் விவரங்கள் தெரியவருகின்றன. இதுபோன்றே இந்திய மொழிகளில் வந்துள்ள தமிழ் நூல்களும் தனிப்படக் கவனிக்கத்தக்கன.

ஒரு பொருள் பற்றிய தனி நூலடைவுகள் சிலவும் அவ்வப்போது வெளிவந்துள்ளன. இவ்வகையில் மலேயாப் பல்கலைக் கழகம் 1966ஆம் ஆண்டு வெளியிட்ட இரு வெளியீடுகள் எடுத்துக்காட்டத்தக்கன. ஒன்று, எம். ஆண்ட்ரனோவ் என்பவரால் திராவிட மொழியியல் பற்றித் தொகுத்து வெளியிடப்பட்ட நூலட்டவணை[31]. மற்றொன்று, வில்லியம் ஒய். வில்லட்ஸ் என்பார் தொகுத்துள்ள மகாபலிபுரம் பற்றிய நூல்களின் தொகுப்பு[32]. இவ்வகைத் தனித் தொகுப்புகளும் குறித்ததொரு பொருள்பற்றி அறிய விரும்புவார்க்கு ஏற்ற வழிகாட்டிகளாகும்.

*நூலக நூல்விவர அட்டவணைகள்*

ஒவ்வொரு நூலகமும் அந்தந்த நூலகங்களில் உள்ள நூல்களுக்குத் தனி விவர அட்டவணைகளைக் காலந்தோறும் தொகுத்து வைத்துக் கொள்வதுண்டு. அன்றியும் பெரிய நூலகங்களில் திங்கள்தோறும் வந்துசேரும் புது நூல்களுக்குத் தனிவெளியீடுகளை வெளியிட்டு வாசகர்களுக்கு அறிமுகம் செய்விப்பதும் வழக்கமாயிருந்து வருகிறது.

திரு. தாஸன் என்பவர் சென்னை 'மூர் அங்காடி'யில் பழைய புத்தகக்கடை வைத்திருந்தவர். இவர் வழியாகத் தமிழ்ப் புலவர்களுக்குச் சென்ற நூற்றாண்டின் அரிய வெளியீடுகள் கிடைத்து வந்தன. தமிழ்ப் புலவர்களுக்கு அறிமுகமான இவர் 'தாஸன் தமிழ் நூல் நிலையம்' என்பதனை 1911-ல் வேப்பேரியிலுள்ள தன் இல்லத்தில் அமைத்திருந்தார். இதில் உள்ள நூல்களுக்கான ஒரு தமிழ் நூற் பட்டியும் இவரால் 1937-ல் வெளியிடப்பட்டுள்ளது[33]. அதில் இவர் தம் நூல் நிலையத்தைப் 'புராதன நவீன புத்தகக் களஞ்சியம்' என்று குறிப்பிடுவது கொண்டே இங்கிருந்த நூல்களின் தன்மையை ஒருவாறு ஊகித்துணரலாம். இவருடைய தமிழ் நூற்பட்டியில் 4000 தமிழ் நூல்களின் விவரங்கள் உள. முற்றும் நூற்பெயர்களே. ஒவ்வொரு நூலும் என்ன பொருள்பற்றியது என்பதைச் சுருக்கக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். 'பன்னூற்பகுதி விளக்கக் குறிப்பு' என்னும் பகுதியில் 'அகராதி' முதலாக 'ஜீவ சரித்திரம்' ஈறாக 72 பொருள்களின் பாகுபாட்டைக் குறிப்பிட்டுள்ளார்.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் 1927-ஆம் ஆண்டு திருநெல்வேலி நகரில் நிறுவப்பெற்ற 'சிவஞான முனிவர் நூல் நிலையம்' 1957-ல் ஒரு நூற்பட்டியை வெளியிட்டுள்ளது. இப் பட்டியலில் நூற்பெயர், ஆசிரியர் பெயர் அல்லது வெளியிட்டவர் பெயர், பதிப்பித்த ஆண்டு ஆகிய விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

இதுபோன்றே கும்பகோணத்திலுள்ள 'சிவகுருநாதன் செந்தமிழ் நூல் நிலையமும்' தனி நூற்பட்டி வெளியிட்டுள்ளது[34]. இதில் 4396 நூல்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இத்தகைய தனி நூலக நூற்பட்டியல்களும் தமிழ் நூல் விவரங்களை அறியப்புகுவார்க்குப் பெருந்துணை செய்யும்.

அமெரிக்க நூலகங்களுக்குப் புத்தகம் வாங்கும் நிறுவனம் இந்தியாவில் தாம் வாங்கும் நூல்களுக்கு ஒரு தனிப்பட்டியலை வெளியிட்டு வருகிறது. இந் நிறுவனம் தம் நாட்டு நூலகங்களுக்காக அவ்வப்போது பல மொழிகளிலும் வெளியாகும் நூல்களில் 20 படிகளை வாங்குகிறது. இவ்வாறு வாங்கப்படும் நூல்களுக்கான விவரப்பட்டியலைத் திங்கள்தோறும் வெளியிட்டும் வருகிறது[35]. இதில் தமிழ் நூல்களும் இடம்பெறுகின்றன. இதுபோன்றே இவர்கள், இலங்கை,

மலேயா நாடுகளில் வாங்கும் நூல்களுக்கும் தனித்தனிச் சேர்க்கைப் பட்டியல் வெளியிட்டு வருகின்றனர். எனவே, அவ்வப்போது வெளி வரும் தமிழ் நூல் விவரங்களை அறிவதற்கு இவர்கள் வெளியிட்டுவரும் சேர்க்கைப் பட்டியல்களும் துணைபுரிகின்றன. இந்தத் திங்கள் வெளி யீடுகள் டியூவி முறையில் பொருளடைவு செய்யப்பட்டுச் செவ்விய முறையில் வெளியிடப்படுவதலால், இவை ஒவ்வொன்றும் தனி நூல் விவரப்பட்டியல்களே. இங்ஙனமே இவர்கள் இந்தியாவில் நடத்தி வரும் ஐந்து நூலகங்களிலும் திங்கள்தோறும் வரும் நூல்களுக்குத் தனித்தனி நூல் விவர அட்டவணைகளை அச்சிட்டு வாசகர்களுக்கு அனுப்பி உதவி வருகின்றனர்[36].

இதுபோன்ற முயற்சியைச் சென்னைப் பல்கலைக் கழக நூலகமும் சில ஆண்டுகளாக (1971—மே மாதம் முதல்) செய்து வருகின்றது. பல்கலைக் கழக நூலகர் திங்கள்தோறும் வந்து சேரும் புதிய நூல் களுக்காக தொகுப்பை மையொற்றுப்படி செய்து, பல்கலைக் கழக அனைத்துத் துறைகளுக்கும் வழங்கி வருகின்றார். இதில் தமிழ் நூல் களுக்கெனத் தனிச் சேர்க்கை அமைத்து, அதனைத் தமிழ் எழுத் திலேயே தந்துவருவது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

### வெளியீட்டாளர் நூற்றொகை

நூல் வெளியீட்டாளர் தத்தம் வெளியீடுகள் குறித்துத் தனி நூல் விலைப்பட்டி வெளியிட்டு வருகின்றனர். இவை வெவ்வேறு வெளி யீட்டாளர் வெளியிட்டுள்ள நூல்களை நமக்கு அறிமுகப்படுத்து கின்றன. திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் தமது 1008ஆம் நூல் வெளியீட்டை ஒட்டிக் கழக வெளியீடு களுக்குப் பாராட்டு விழா நூற்பட்டி ஒன்றைத் தொகுத்துத் தந் துள்ளனர். இதனை, ஆக்கியோர் காலஞ்சென்ற நூலக மேதை எஸ். ஆர். ரங்கநாதன் அவர்களும், மறைமலையடிகள் நூலகர் திரு. இரா. முத்துக்குமாரசுவாமி அவர்களும் ஆவர். மற்றும் நாள், கிழமை, திங்கள் இதழ் வெளியீடுகள் குறித்தும் கழகம் ஒரு தொகுப்பு வெளியிட்டுள்ளமையும் நினைவுகூரத் தக்கது.[37]

சென்ற நூற்றாண்டில் தனிப்பட்டவர்கள் மட்டும் அன்றிச் சில அச்சகத்தாரும் தமிழ் நூல்கள் பல வெளிவருதற்குப் பெருந்தொண்டு புரிந்துள்ளனர். இப்பொழுது பழந்தமிழ் நூல்கள் பலவற்றை அச்சிட்டு வெளியிட்டுவரும் கழகத்தைப்போல, சென்ற நூற்றாண்டில் பல நூல்களை அச்சிட்ட இரு அச்சுக்கூடங்கள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை. ஒன்று ஊ. புஷ்பரதச் செட்டியாரின் கலாரத்நாகர அச்சுக் கூடம்; மற்றொன்று சை. இரத்தினச் செட்டியாரின் மதராஸ் ரிப்பன் பிரஸ். இவ்விரு அச்சுக்கூடங்களும் இலக்கணம், இலக்கியம், நிகண்டு முதலிய பல்வகை நூல்களை அச்சிட்டுப் பரப்பியுள்ளன.

### விளம்பர நூலட்டவணை

நூல் வெளியீட்டாளர் தாங்கள் வெளியிடும் நூல்களில் முன்பு வெளியிட்டிருப்பனவும் பின் வெளியிட இருப்பவுமான நூல்களின் பட்டியலைத் தருவது வழக்கமாயிருந்து வருகிறது. சென்ற நூற்றாண்டு வெளியீடுகளிலும் பிறவற்றிலும் வந்துள்ள இத்தகைய விளம்பரங்களாலும் பல நூல்களின் விவரங்கள் தெரியவரும். கலாரத்னாகர அச்சுக்கூடம், மதராஸ் ரிப்பன் பிரஸ் வெளியீடுகளின் விளம்பரங்களால் சென்ற நூற்றாண்டு நூல்கள் பல தெரிவதற்கு வாய்ப்பு உண்டு. 1941இல் டாக்டர் உ. வே. சாமிநாதையர் தாம் வெளியிட்ட தமிழ் விடுதூதில் தமது வெளியீடுகளாகிய 40 நூல்களின் விவரம் தந்துள்ளார். இங்ஙனமாக, நூல்களில் வெளியீட்டாளர் தரும் பிற நூல் விவரங்களும், அன்றி, ஓர் ஆசிரியர் தமது பிறநூல்பற்றி வெளியிடும் குறிப்புகளும் நூல் விவரங்களைத் தெரிந்துகொள்வதற்கு உதவுவனவாம். பழைய நூல்களின் விளம்பரங்களிலிருந்து தெரியவரும் நூல் விவரப் பட்டியல் ஒன்றை மறைமலையடிகள் நூலகம் தொகுத்து வைக்க முற்பட்டிருப்பது பாராட்டத் தக்கது.

### இக்கால நூல்கள்

இப்பொழுது நாள்தோறும் வெளிவரும் தமிழ்நூல் விவரங்களை இந்திய தேசிய நூலகத்தின் முத்திங்கள் அட்டவணையும் ஆண்டுத் தொகுதிகளும் தந்து வருகின்றன. ‘செந்தமிழ்ச் செல்வி’, ‘நூலகம்’ போன்ற திங்கள் இதழ்கள் புதிதுபுதிதாக வரும் தமிழ்நூல் விவரங்களைத் தொடர்ந்து வெளியிட்டு வருவதும் சிறப்பாகப் போற்றத் தக்கதாம். மேலும், நாள், வார, பக்க, திங்கள் இதழ்களில் அவ்வப்போது வெளிவரும் நூல் மதிப்புரைகளும் இக்கால நூல்களுக்கு ஏற்ற அறிமுகங்களாம், ‘தமிழ் உறவு’ என்னும் இதழ் குறிப்பாகத் தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்க வெளியீடுகளை அறிவிக்கும் நோக்கத்துடனேயே வெளியிடப்படுகிறது.

இந்நாள் வாழ்ந்துவரும் எழுத்தாளர் குறித்தும் சில வெளியீடுகள் வந்துள்ளன. ‘தமிழ் எழுத்தாளர் யார்? எவர்?’ என்னும் தலைப்பில் 1962இல் தென்மொழிப் புத்தக டிரஸ்ட் ஒரு நூல் வெளியிட்டுள்ளது. இதே தலைப்பில், 1966இல் ‘தமிழ் எழுத்தாளர் சங்கம்’ ஒரு தொகுப்பு வெளியிட்டுள்ளது. பின்னர்க் குழந்தை எழுத்தாளர் சங்கம், ‘குழந்தை எழுத்தாளர் யார்? எவர்?’ என்னும் ஒரு நூற்றொகையை வெளியிட்டுள்ளது. இன்னோரன்ன வெளியீடுகள் இக்கால ஆசிரியர்களையும் அவர்தம் நூல்களையும் அறிவதற்குத் துணைசெய்து வருகின்றன.

இலங்கை, மலேயா, சிங்கப்பூர் முதலிய இடங்களில் வெளிவரும் தமிழ்நூல்களை அறிவதற்கு அவ்வந்நாட்டுப் பத்திரிகைகளில் வரும் மதிப்புரைகள், விளம்பரங்கள் ஆகியவை துணைபுரியும். அன்றியும், அந்தந்த நாட்டு எழுத்தாளர்களையும் அவருடைய படைப்புகளையும்

அறிமுகப்படுத்தும் நூல்கள் சிலவும் வெளிவந்துள்ளன. திரு. எப். எக்ஸ். ஸி. நடராஜா என்பவர் தொகுத்துள்ள 'ஈழமும் தமிழும்' என்னும் நூல் இலங்கையில் பலகாலத்தும் வெளிவந்த தமிழ்நூல் களுக்கு ஒரு நல்ல அறிமுகமாகும்[38]. இதில் செய்யுள்நூல் தொடங்கிப் பத்திரிகாசிரியர்வரை நூல்களும், நூலாசிரியரும் நூல் வெளியீட் டாளரும், ஆண்டுகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

'மலேசியாவில் தமிழ் எழுத்தாளர்கள்' என்னும் நூல் 1967-ல் திரு. சி. வேலுசாமி என்பவரால் தொகுக்கப்பெற்று, மலேயாத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தாரால் வெளியிடப்பட்டுள்ளது. இந் நூல் மலேசியாவில் உள்ள 225 தமிழ் எழுத்தாளர்களின் நூல்களை அவர் களுடைய சுருக்கமான வாழ்க்கைக் குறிப்புகளுடன் அறிமுகப்படுத்து கிறது. இதில் பெரும்பான்மையோர் உருவப்படங்களும் இடம் பெற்றிருப்பது ஒரு தனிச் சிறப்பாகும். நூல்களின் அகரவரிசைப் பட்டியலும் தரப்பட்டிருக்கிறது. பின், 1969-ல் மலேயாப் பல்கலைக் கழகத்தின் வழி ராமசுப்பையா என்பவரால் மலேயாவிலுள்ள தமிழ் நூல்கள், இதழ்களுக்கான ஒரு தொகுப்பு வெளியிடப்பட்டுள்ளது[39]. இவையும் இவைபோல்வனவும் நம் தமிழகத்திலும் தமிழ் வழங்கும் பிற நாடுகளிலும் இந்நாளிலும் முன்னாளிலும் வெளிவந்த நூல்களின் வரலாறுகளைத் தெரிந்துகொள்வதற்கு ஏற்ற கருவி நூல்களாக உள்ளன.

### நூல் விவர அட்டவணைகளும் இலக்கிய வளர்ச்சியும்

தமிழ் நூல்களுக்குப் பல்வேறு காலங்களிலும் வெளியிடப்பெற்று வந்துள்ள நூல் விவர அட்டவணைகளால், தமிழில் அவ்வப்போது வெளிவந்த பலதுறை நூல்களின் வரலாறுகளையும் தெரிந்துகொள் கிறோம். சிறப்பாகத் தமிழ்மொழி வரலாறு, இலக்கிய வரலாறு களுக்கு இவை பெருந்துணை புரிவனவாம். நாட்டு வரலாறு, மக்களின் சமூக—பண்பாட்டு நிலைகள் முதலியவற்றைச் சரிவரத் தெரிந்துகொள் வதற்கும் இவை வழிகாட்டும்.

விடுதலை நாளில் தொடங்கப்பெற்றுச் சிறப்பாகப் பத்துத் தொகுதிகளில் வெளிவந்துள்ள 'தமிழ்க் கலைக்களஞ்சியம்' தமிழ் இலக்கியக் களஞ்சியமாகவும் திகழ்கிறது[40]. இக் கலைக்களஞ்சியத் தின் அனுபந்தத் தொகுதியில் முன் தொகுதிகளில் உரிய இடங்களில் சேர்க்கப்படாது விடுபட்டிருந்த புலவர்கள், நூல்கள் முதலியவற்றை இணைப்பதற்கு 'தமிழ்நூல் விவர அட்டவணை' பெரிதும் உதவியிருக் கிறது. இக் கலைக்களஞ்சியம் தொடங்கப்பட்ட காலத்தில் தமிழ்நூல் விவர அட்டவணைகள் முற்றும் வெளிவந்திருந்தால், இன்னும் எத்தனை இலக்கிய நூல்கள், ஆசிரியர்கள், இலக்கிய மரபுகள் முதலியன பற்றிய சிறப்புச் செய்திகள் இடம்பெற்றிருத்தல்கூடும். எனினும், இனி வருங்காலத்தில் இக் கலைக்களஞ்சியத்தில் தமிழ்நூற் செய்திகள்

மிகுந்த அளவில் இடம்பெற தமிழ்நூல் விவர அட்டவணைகள் பெரிதும் துணைசெய்யும் என்பதற்கு ஐயமில்லை.

நமது நாட்டுப் பதிப்பாளர், நூலாசிரியர் முதலியோருள் சிலர், அறிந்தோ அறியாமலோ, முன்னையோர் ஆக்கப் பணிகளைச் சுட்டாமல் விட்டுவிடுகின்றனர். எனினும், உண்மையைத் தமிழ்நூல் விவர அட்டவணைகள் உணர்த்திவிடும்.

காலப் பழமையால் பழம் பதிப்புகள் முதலியன வழங்காமல் போய்விடுகின்றன. பிந்திய பதிப்புகளைக் காண்போர் முன்னிலை அறியாமையால் பின்னையோரையே முதற் பதிப்பாசிரியர் என்று மயங்கிவிடுதலும் இயல்பே. இவ்வாறான மாறுபாடுகளைத் தீர்த்து வைக்கின்றன இந்நூல் விவர அட்டவணைகள்.

மேலும், ஒரு பொருள்பற்றி ஆராய்ந்து எழுதப்புகுவோர்க்கு அவ்வத்துறையில் ஏற்கெனவே வெளிவந்த நூல்களைப்பற்றி அறிவிக்கும் கருவி நூல்களாக இவை பயன்படுகின்றன. இங்ஙனமாகத் தமிழ் நூல்களின் வரலாற்றை முற்றும் முழுமையாக உணர்வதற்குத் தமிழ் நூல் விவர அட்டவணைகளே துணைபுரிவன என்பது தெளிவு. ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள 'ஆங்கில இலக்கிய அகராதி' போன்று தமிழிலும் நூல்கள் ஆக்கப்படுவதற்கு தமிழ் நூல் விவர அட்டவணைகள் ஆக்கப்படுவது என்றும் வேண்டற்பாலதே.

## விளக்கக் குறிப்புகள்

1. பதினொன்கு தேசிய மொழிகளாவன: அஸ்ஸாமி, வங்காளி, இங்கிலீஷ், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம், மராத்தி, ஒரியா, பஞ்சாபி, சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, உருது.
2. Delivery of Books and Newspapers Act of 1954. (Act No. 27 of 1954 as amended by Act No. 99 of 1956).
3. 'இந்திய தேசிய நூல் விவரப்பட்டியல்' (The Indian National Bibliography) 1958-ஆம் ஆண்டு முதல் சென்ற ஆண்டு வரை (1972) 12 தொகுதிகள் வெளிவந்துள்ளன.
4. தேசிய நூலகம் தொகுத்தளித்துவரும் 'தமிழ்ப்பகுதி' 1958 முதல் சில ஆண்டுகளுக்கு வெளிவந்துள்ளது. ஆனால், தொடர்ச்சியாக இது இல்லை.
5. 'தமிழ்நாடு' என்னும் பெயர்சூட்டித் தமிழகத்தின் பழம் பெருமையை மீண்டும் நிலைநாட்டியது மாண்புமிகு சி. என். அண்ணாதுரை அவர்களின் அமைச்சரவையாகும்.

6. கல்லூரிப் பட்டப்படிப்பிற்கு 280-ம், புகுமுக வகுப்பிற்கு 170 நூல்களும் வெளிவந்துள்ளன. இவை பொருளியல், வரலாறு முதலிய 22 துறைகளுக்கு உரியனவாம்.

7. முன்பு இதற்கு 'Madras Record Office' என்பது பெயர்.

8. தமிழ்ப் பேரகராதியில் (Tamil Lexicon) பயன்படுத்திய நூல்கள், ஆசிரியர் விவரங்கள் தரப்பட்டுள்ள முறையே இவ்வகையமைப்புக்கு வழிகாட்டியது.

9. Classified Catalogue of Tamil Printed Books with Introductory Notices—Compiled by John Murdoch. Madras: The Christian Vernacular Education Society, Printed by Caleb Foster, At the Poster Press, 23, Rundall's Road, Vepery, 1865.

10. A Descriptive Catalogue of Oriental Manuscripts and other Articles illustrative of the Literature, History, Statistics and Antiquities of South India, Collected by Lient. Colin. Mackenzie, Surveyor General of India By H. H. Wilson 1928.

11. Oriental Historical Manuscripts in the Language Translated with annotations: By William Taylor, in two Volumes—1835.

12. A Catalogue of Raisonne of Oriental Manuscripts in 3 Volumes by Rev. Willim Taylor, 1857, 1860, 1862. (Title Page and Content. See. Murdoch's Catalogue, PP. 305—308.

13. Madras Record Office: Classified Catalogue of Books Registered from: at the Office of the Registration of Books.

| | | |
|---|---|---|
| 1890—1900 | Published | 1961. |
| 1901—1910 | ,, | 1964. |
| 1911—1915 | ,, | 1965. |
| 1916—1920 | ,, | 1966. |

14. Madras State Bibliography—1951.

15. குழந்தை நூற்றொகையின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் மர்டாக் நூலட்டவணையில் காணலாம்.

Bibliography of Childrens Literature, Murdoch's Catalogue, PP. 325—328.

16. A Catalogue of the Tamil Books in the Library of the British Museum. Compiled by Dr. L. D. Barnett, M.A., Litt. D. and the Late Dr. G. U. pope—1909.

17. A Supplementary Catalogue of the Tamil Books in the Library of the British Museum—Compiled by Dr. L. D. Barnett—1931.

18. Descriptive Catalogue of Tamil Manuscripts.

19. இவ்விரண்டும் சென்னை ஆசிரியர் நூற்பதிப்புக் கழக வெளியீடுகளாகும்.

20. தமிழ்ப்புலவர் வரிசை, தமிழ்ப்புலவர் அகரவரிசை—மூன்று தொகுதிகள், முப்பது புத்தகங்கள்—கழக வெளியீடு. (1959—1972).

21. சங்க இலக்கியம் : பதிப்பாசிரியர்—எஸ். வையாபுரிப்பிள்ளை முதற்பதிப்பு—1940 : சைவசித்தாந்த மகா சமாஜ வெளியீடு. இரண்டாம் பதிப்பு—1965 : பாரி நிலைய வெளியீடு.

22. அ. திருமலை முத்துசாமி : A. Thirumalai muthuswamy : A Bibliography on Thirukkural. Meenakshi Puthaka Nilayam. 1962.

23. 'தமிழாய்வு'—சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு 1972. இது ஆண்டுக்கு இருமுறை பல்கலைக் கழகத் தமிழ்த்துறை வெளியிடும் ஆய்வுத் தொகுதி.

24. இரா. கா்சிராசன் : 'சிலப்பதிகார ஆய்வடங்கல்'—கேரளப் பல்கலைக் கழக வெளியீடு—1973.

25. சுவாமிகளின் பெயரர் தி. மு. சங்கரலிங்கம் இதனைத் தொகுத்து அமைத்துள்ளார்.

26. சிதம்பரம் நாவலர் அறநிலையத்தாரின் வெளியீடு.

27. டாக்டர் ந. சஞ்சீவி : சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள், சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு—1973.

28. மு. அருணாசலம் : சைவ சித்தாந்தச் சிறுநூல்கள்—சைவ சித்தாந்த மகா சமாஜச் செயலாளர் கிழக்குமருதூர் நாராயணசாமி நாயுடு மணிவிழா மலர்—1966.

29. Library of Indian Christian Thelogy — A Bibliography — Compiled by: Kaj Baago — published by the Christian Literature Society, Madras-1969.

30. A reference guide to Tamil Studies: books by Xavier S. Thani Nayagam, University of Malaya, Kula Lumpur, 1966.

31. M. Andronov, M.A., Ph. D., Materials for a Bibliography of Dravidian Linguistics. Department of Indian Studies, University of Malaya, Kula Lumper, 1966.

32. William Y. Willetts — An Illustrated Annotated Annual Bibliography of Mahabalipuram on the Coramandal Coast of India 1852—1962 —Department of Indian Studies, University of Malaya, Kula Lampor, 1966.

33. தாஸன் தமிழ்நூல் நிலையம் என்னும் புராதன நவீன புத்தகக் களஞ்சியம்—ஸ்தாபகம் 1911. தமிழ்நூற் பட்டி 1937.

34. இந்நூல் நிலையம் 1947-ல் நிறுவப்பட்டது.

35. Library Congress Public Law 480 Project. Accessions List India From 1961 onwards.

36. New Books added to in India.

37. இதனைத் தொகுத்தவர் சு. அ. இராமசாமிப் புலவர்; இது 1961-ல் வெளிவந்தது.

38. கலைமகள் வெளியீடு, மட்டக்களப்பு.

39. Tamil Malaysiana — by Ram Subbaiah. Department of Indian Studies, University of Malaya, 1969.

40. தமிழ்க் கலைக்களஞ்சியம்—தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடு. I முதல் X தொகுதிகள் 14 ஆண்டுகளில் (1954—1968) வெளியிடப்பட்டுள்ளன. குழந்தைகள் கலைக் களஞ்சியம் இப்பொழுது வெளிவந்துகொண்டிருக்கிறது. இதுவரை ஆறு தொகுதிகள் (1968—1973) வெளிவந்துள்ளன. இவற்றை ஆக்கியளிக்க முதற்காரணமாய் விளங்கும் பெரியார் திரு. தி. சு. அவிநாசிலிங்கம் செட்டியார் அவர்களும், திரு. ம. ப. பெரியசாமி தூரன் அவர்களைப் பிரதம ஆசிரியராகக் கொண்ட குழுவினரும் தமிழ்மக்களின் பாராட்டுதலுக்கு என்றும் உரியவர்களாவார்கள்.